# ஸ்ரீ ராமாநுஜன்—338



ஆசிரியர்:

மஹாமஹிமோபாத்யாய ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்

அண்ணங்கராசாரியர்

ஸம்புடம் 29 | நளஸ ஆடி மாதம் 10—8—76 | ஸஞ்சிகை 2


## பிங்கள வத்ஸர மங்களோபந்யாஸகர்களுக்கு

# அண்ணா அளிக்கும் விருந்து

எம்பெருமானாருடைய திருவவதார ஸம்வத்ஸரமான பிங்களவாண்டு ஸமீபித்திருப்பதனால் இதைப்பற்றின பலவகைக் கொண்டாட்டங்களை ஆங்காங்கு நிகழ்த்த



வேணுமென்கிற குதூஹலம் பெரும்பாலும் ஸ்ரீவைஷ்ணவர்களனைவர்க்கு முள்ளது. ஸ்வாமியின் சரித்திர வைபவங்களைப் பற்றியோ ஸ்ரீஸூக்தி வைபவங்களைப்பற்றியோ உபந்யாஸங்கள் நடத்துவதும் கொண்டாட்ட வகைகளில் ஒன்றாகும். ஞாயிற்றுக்கிழமைதோறும் சில விடங்களிலும், திருவாதிரைதோறும் சில விடங்களிலும் வித்வான்களால் உபந்யாஸங்கள் நடத்தப்பட்டுவருவதாகக் கேட்டு மகிழ்கிறோம். வித்வான்களாய் உபந்யஸித்து வழக்கப்பட்டவர்களாயுள்ள பெரியார்கள் எளிதாக உபந்யாஸங்கள்செய்து பக்தர்களை உகப்பித்து வருகிறார்கள். உபந்யாஸத்தில் பழக்கமில்லாதவர்கள் "உபந்யஸிக்க ஏதாவது விஷயம் எழுதியனுப்பவேணு" மென்று நமக்கு எழுதிவருகிறார்கள். ஒவ்வொருவர்க்கும் தனித்தனியே எழுதி

யனுப்புவதிற்காட்டிலும் ஸ்ரீ ராமாநுஜனில் வெளியிட்டுவிடுவது நலமென்று தோன் றினபடியால் "பிங்களவத்ஸர மங்களோபந்யாஸகர்களுக்கு அண்ணு அளிக்கும் விருந்து" என்னு மிந்த மகுடமிட்டு, எம்பெருமானுர் ஸ்ரீஸூக்திப் பெருமைகளை உபஹரித்துவருவதாக உத்தேசித்துத் தொடங்குகிறேம். முன்னிதழில் தெரிவித் தும தொடங்கியுமுள்ள் இராமாநுச நூற்றந்தாதி யுரை வெளியீடு அடைடவே நிகழ்ந்துவரும். உபந்யாஸகர்களுக்கு அதுவும் உதவும். ... ...

# பகவத்ராமாநுஜ கீதாபாஷ்யஸூக்திரஸம்

கீதையில் ஏழாமத்யாயத்தில் 'வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸ்ஸுதுர்லப:' என்றவிடத்து 'வாஸுதேவஸ் ஸர்வம்' என்றதற்கு சங்கரபாஷ்யத்தை யும் நம ஸ்வாமி பாஷ்யத்தையும் உற்று நோக்கவேணும். 'வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ் மஹாத்மா ஸுதுர்லப:' என்பதற்கு சங்கரர் பணித்த பொருள் 'ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம' இத்யாதி ஸ்தலங்களில் போலவே அத்வைதமாகவுள்ளது; 'வாஸுதேவ ஏவ மம ஸர்வம்' என்பதாகக் கொள்ளப்படவேயில்லே. பரப்ரஹ்மத்திற் காட்டில் வேறுபட்ட பொருள் எதுவுமே யில்லையாகையாலே, எல்லாம் ப்ரஹ்மமேயென்று கொண்டு என்னைப் பணிகின்ற மஹாத்மா துர்லபன்—என்று கீதாசார்யன் சொல் லுவதாக சங்கர பாஷ்ய ப்ரக்ரியை. இதை நமது பாஷ்யகாரர் கண்டித்திருக்கிரு ரென்பது "வாஸுதேவஸ் ஸர்வமித்யஸ்ய அயமேவார்த்த:" என்கிற ததீயபாஷ்ய ஸூக்தியாலும், "வாஸுதேவஸ்ஸர்வமிதி ஸாமாநாதிகரண்யஸ்ய பராபிமதமர்த்தம் ப்ரதிக்ஷிபங் ஸ்வோக்தம் த்ரடயதி-வாஸுதேவ இதி" என்கிற தாத்பர்யசந்த்ரிகா ஸூக்தியாலும் அறியவெளிது. இங்கு சங்கரர் பணித்த பொருளானது அவசியம் கண்டிக்கத் தகுந்ததுதானேவென்று பார்க்கவேணும். ஸர்வவஸ்து ஸாமாநாதி கரண்யார்ஹத்வரூபமான வஸ்துபரிச்சேதராஹித்யத்தை ப்ரஹ்மத்தினிடத்தில் விசிஷ்டாத்வைதிகளான நாமும் இசைந்தேயிருக்கிறேம். தாத்பர்ய நிர்வாஹத்தில் வாசியேயொழிய சப்தஸந்தர்ப்பத்தில் ஒரு வாசியுமில்லை நமக்கும். இங்கே சங்கரர் எழுதிவைத்த பொருள் அஸம்பாவிதமன்று. ☼ஸப்ரஹ்மா ஸ சிவஸ் ஸேந்த்ரஸ் ஸோக்ஷர: பரமஸ் ஸ்வராட்☼ என்கிற வடமொழி வேதத்தையும், ☼அவனே யவனு மவனுமவனும், அவனே மற்றெல்லாமுமறிந்தனமே☼ என்கிற தமிழ் வேதத்தையும் நிர்வஹிக்கிற ரீதியிலே ☼வாஸுதேவஸ் ஸர்வமென்கிற விதையும் எளிதாக நிர்வஹிக்கலாமாயிருக்க இங்கே கண்டனம் அவச்யமன்றேயென்று ப்ரத்யவஸ்தா நம் ப்ராப்தமாகும்.

சங்கரருடைய அத்வைதாபிப்ராயத்தை ஸ்வாமி கீழே வெகு விரிவாகக் கண் டித்தே யிருக்கிருர். [2-12 பாஷ்யம் ஸேவிப்பது. 13-2 பாஷ்யத்திலும் மிகமிக விரிவாக ஸேவிப்பது.] அதை இங்கும் கண்டிக்கவேண்டிய அவச்யமில்லைதான். இங்குக் கண்டிக்கிற விதம்வேறு. இவ்வர்த்தம் இந்த ப்ரகரணத்திற்குச்சேராதென்று திருவுள்ளம்பற்றியே இவ்விடத்தில் ப்ரதிக்ஷேபமுள்ளது. இங்கே ஸ்வாமியருளிச் செய்த பொருள் என்னவென்று பார்ப்போம், 'வாஸுதேவஸ் ஸர்வ' மென்பதற்கு ஸ்வாமியருளிய பொருள் இதுவே—வாஸுதேவ ஏவ மம பரமப்ராப்யம் ப்ராபகஞ்ச, அந்யதபி யந்மநோரதவர்த்தி ஸ ஏவ மம தத்ஸர்வம்" என்பது கீதா பாஷ்யஸூக்தி.

இதை தாத்பர்ய சந்த்ரிகையில் விவரிக்கும்போது தாரகபோஷக போக்யங்களும் எம்பெருமானே யென்று கொள்ளுகிற மஹாத்மாவை விவக்ஷிப்பதுதான் இவ்விடத்திற்குச் சேரும்-என்று ஸ்பஷ்டமாக எழுதியுள்ளார். திருவாய்மொழியில் *உண்ணுஞ் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணன்* என்று ஆழ்வாரருளிச் செய்தது ¤வாஸுதேவஸ்ஸர்வமென்கிற இத்தையநுஸரித்தேயென்று ஆளவந்தார் முதலானோர் நிர்வஹித்து வந்தார்கள். திருவாய்மொழியின் வ்யாக்யாதாக்களான பூர்வாசார்யர்களும் அங்கு இந்த கீதாவசனத்தை யுதாஹரித்தே வியாக்கியானம் செய்தருளியுள்ளார்கள். சங்கரருக்குத் திருவாய்மொழியில் ப்ரவேசமில்லாமையாலே அவர்தாம் வேறு வகையாக பாஷ்யமிட்டாலும் திருவாய்மொழியமுதக் கடலிலே ஆழ்ந்தவரான ஸ்வாமி அவ்வர்த்தத்தை எங்ஙனே இசையக்கூடும்? *வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப:* என்று சொல்லுகிற கீதாசார்யனும் நம்மாழ்வாரை நெஞ்சில் கொண்டே அது சொல்லியிருக்க, அதற்கு இணங்காத பொருள் ஸ்வாமிபாஷ்யத்தில் எப்படி இடம் பெறும்? அப்பொருளை ஸ்வாமி எப்படி ஸஹிப்பார்? தமக்கு *எல்லாங் கண்ணனென்று சொல்லுகிற மஹாத்மாவாகிய நம்மாழ்வார், அந்தோ!. என் கண்ணுக்குக் கிடைக்கவில்லையே! யென்று அழுதுகொண்டேயன்றோ கீதாசார்யன் இந்த ச்லோகம் பணித்தான்! கண்ணன் தன்னடிச்சோதிக்கு எழுந்தருளினபின் சிலநாளிலே ஆழ்வாருடைய திருவவதாரம். கண்ணபிரான் ஆழ்வாரை ஸேவித்துவிட்டுத் தன் அவதார ஸமாப்தியைச் செய்துகொள்ள மிகவும் ஆசைப்பட்டிருந்தான்; அந்த பாக்யம் அவனுக்கு துர்லபமாயிற்று; அது இந்த ச்லோகத்தில் *ஸ மஹாத்மா ஸுதுர்லப:* என்பதனாலே ஸூசிதமாகிறது—என்று ஆசார்யர்கள் நிர்வஹித்துப்போருவது ஸோபபத்திகமென்று கீதாபாஷ்ய ஸூக்திகளாலறிகிறோம். ஆக, 'ஜகத் ஸர்வம் வாஸுதேவ:' என்பதாக சங்கரர் கொண்டார்; அங்ஙனன்றிக்கே 'மம ஸர்வம் வாஸுதேவ:' என்பதாக நம் ஸ்வாமி கொண்டார். இதுதான் திருவாய்மொழிக்குச் சேர்ந்ததும், திருவாய்மொழியிலிருந்து தெரிந்து அருளிச் செய்யப்பட்டதுமான மிகச்சிறந்த பொருள் என்று தெளிவிக்கப்பட்டதாயிற்று. ... ... ¤

## உண்ணுஞ்சோறு பருகுநீர்...எல்லாம் கண்ணன்

இப்பதிகம் (திருவாய்மொழி 6-7) தாய் பாசுரமாக அவதரித்தது. தாய் பாசுரமாக வைத்துப் பேசுபவர் ஆழ்வாரே யாதலால் தம்முடைய படியைத் தாமே தெரிவிப்பதாகும், ஆசார்யஹ்ருதயத்தில் வ்யாஸ பராசராதி மஹர்ஷிகளுக்கும் ஆழ்வார்க்குமுள்ளவாசியை விரிவாக அருளிச்செய்து வருமிடத்து "அவர்களுக்குக் காயோடென்னுமிவையே தாரகாதிகள்; இவர்க்கு எல்லாம் கண்ணனிறே" என்றருளிச்செய்த சூர்ணையை உரையுடன் இங்கு அநுபவிப்பது. இங்கே ஆக்ஷேப ஸமாதானம் குறிக்கொள்ளத்தக்கது. உண்ணாத சோறுமுண்டோ? பருகாத நீருமுண்டோ? தின்னாத வெற்றிலையுமுண்டோ? எதற்காக இந்த அடைமொழிகள் கொடுப்பது? பாதபூரணத்திற்காகவா? என்று சிலர் கேட்கலாம். வ்யாக்யானத்திலுள்ள அழகைக் காட்டுகின்றோம். சோறு எப்போதும் உண்ணுஞ்சோறாகவிராது. வயிறு நிறைய உண்டவனுக்கு தேவாம்ருதம் கிடைத்தாலும் அது உபேக்ஷணீயமாகவே யிருக்கும். கங்கைக் கரையிலுள்ளவனுக்குக் குளத்துநீர் அநபேக்ஷிதமா

யிருக்கும். வாய்நிறைய வெற்றிலையைக் குதப்பியுள்ளவனுக்கு வேறு வெற்றிலை தின்னும் வெற்றிலையாக இராது. ஆகவே "உண்ணுஞ்சோறு" என்றது பசித்தவன் விரும்பியுண்ணுஞ்சோறு என்றபடி. 'பருகும் நீர்' என்றது பாலைவனத்தில் திரிந்து நாக்கு ஒட்டிப்போனவன் விரும்பிப் பருகும் நீர் என்றபடி. 'தின்னும் வெற்றிலை' என்றது நாவில் பசையற்று வறண்டுகிடப்பவன் விரும்பித் தின்னும் வெற்றிலை என்றபடி. ஆழ்வார் எம்பெருமானை அனுபவிப்பது இவ்வகையிலேயாம்.

## ஸ்ரீராமாநுஜரும்—திருக்கோட்டியூர் நம்பியும்

ஸ்ரீராமானுஜர் திருக்கோட்டியூரில் திருமந்திரத்தை, அல்லது சரமச்லோகத்தை தகுதியில்லாதவர்களுக்கு வாரி யிறைத்தாரென்றுகொண்டுசிலருடையபழிப்பு;இதில் நல்ல தெளிவைப் பிறப்பிக்கிறோம். திருக்கோட்டியூர் நிகழ்ச்சியில் பலர் மாறுபடச் சொல்லி வருவதுண்டாதலால் அதைப்பற்றின தெளிவைப் பிறப்பிக்கிறோம். ஸ்ரீபட்டர் அருளிச் செய்த கோஷ்டீநாத ஸ்துதியான முக்தக ச்லோகங்களில் "கோஷ்டீபூர்ணகுருபஸத்தி குசலோ யாம் கச்வதாஸேதிவாந்" என்பது ஒரு சுலோகம். இதனால் ஸ்ரீராமானுஜர் திருக்கோட்டியூர் நம்பி பக்கலில் அர்த்த விசேஷம் கேட்கப் பலகால் திருக்கோட்டியூருக்கு எழுந்தருளினமை தெளிவாகிறது.

இங்ஙனே பலகாலெழுந்தருளி மிகமிக அருமையாக நம்பியிடமிருந்து அர்த்த விசேஷங்கள் பெற்றாரென்பதில் யாருக்கும் விவாதமில்லை. அந்த அர்த்தத்தை ஆசார்ய நியமனத்தைக் கடந்து பலபேர்களுக்குச் சொல்லிவிட்டாரென்று கொண்டு இது அஸங்கதமான வரலாறென்று சிலர் மறுப்பதுண்டு இங்கு தத்துவத்தைச் சுருக்கமாக எழுதி முடிக்கிறேன். அடிக்கடி ராமானுஜர் திருக்கோட்டியூருக்கு எழுந்தருள்வது நம்பிபக்கலில் அர்த்த விசேஷம் பெறுவதற்காக என்று தெரிந்துகொண்ட அவ்வூர் விலக்ஷணாதிகாரிகள் சிலர் ஸ்வாமியிடம் விடை கொண்டு "நம்பிகளிடமிருந்து அர்த்தம் கிடைப்பது தேவரீருக்கே இவ்வளவு அருமையாக இருக்கும்போது அடியோங்களுக்குக் கிடைக்க வழியே கிடையாது. ஒருகால் தேவரீருக்கு நிதி கிடைத்தால் அடியோங்களை விலக்கிவிடக்கூடாது" என்று பிரார்த்தித்துக்கொண்டிருந்தார்கள். அன்னவர்களின் சிரத்தையையும் ஆர்வத்தையும் நோக்கி உகந்தருளின ஸ்வாமி, நம்பிபக்கலில் தாம் அர்த்தம் பெற்ற பிறகு அவர்களைமட்டும் ஸௌமிய நாராயணன் ஸன்னிதி மேல்தளத்திலே ஏகாந்தமான இடத்திலே ஒரு குழுவாக இருக்கவைத்து உபதேசித்தருளினார்.

ஆசார்ய ஹ்ருதயத்தில் "தாய்க்கும் மகனுக்கும் தம்பிக்கும் இவர்க்கும் இவரடிபணிந்தவர்க்குமே இவையுள்ளது" என்ற (204) சூர்ணையின் வியாக்கியானத்தில் "பல்கால் நடந்து துவண்டு கேட்ட பரமார்த்தத்தை ஓலக்கமாக வைத்து உபதேசித்தும்" என்பது மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்தி. ஓலக்கமாக வைத்துஉபதேசிக்கைஎன்பது கண்டவர்களுக்கும் வாரியிறைப்பதன்று. ராமாநுஜர் வியர்த்தமான காரியத்தை ஒருகாலும் செய்யார். பணம் காசு பைசாவாக இருந்தால் வீதியில் வாரியிறைக்கலாம், வருவார் செல்வார் கைக்கொண்டு போகலாம். சிஷ்யவிருத்தி செய்து ஆதரத்தோடு கேட்பாருக்கும் அறியவரிதான அர்த்த விசேஷத்தைத் தெருவில் போவார்க்கு வாரி யிறைப்பதனால் என்ன பலனாகும்? அப்படி நடந்தது கிடையாது. இதை உலகு தெளிவுற அறியவேண்டும். ... ✲

# ஸஹஸ்ரநாம பாஷ்யப் பெருமை

ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமத்திற்கு த்ரிமதஸ்தர்களாலும் பாஷ்யமியற்றப்பட்டுள்ளது. அவற்றுள் நமது விசிஷ்டாத்வைத ஸம்பிரதாயத்திற்கான பாஷ்யம் பட்டருடையதேயாம். அதற்கு **பகவத்குண தர்ப்பண** மென்று திருநாமம் சாத்தினது சாலப் பொருத்தம். குணநுபவஞ் செய்ய குதூஹலமுள்ளவர்கள் ஈடுமுப்பத்தாறு யிரப்படி யென்கிற பகவத் விஷய திவ்யக்ரந்தத்தில் போதுபோக்கவேணுமென்பது ப்ரஸித்தம். அதில் அவகாஹிக்க ப்ராப்தியற்ற சுத்தஸம்ஸ்க்ருத பண்டிதர்கள் சாஸ்த்ர ஜ்ஞானமுள்ளவர்கள் அற்புதமாகக் குணநுபவஞ் செய்ய விருப்பினுல் அவர்களுக்கு பட்டருடைய ஸஹஸ்ரநாம பாஷ்யமே தஞ்சமென்னத்தகும். ஏற்கெனவே ஸஹஸ்ரநாமத்திற்கு சங்கரபாஷ்யம் தோன்றியுள்ளது. நிர்க்குண ப்ரஹ்மவாதிகள் எம்பெருமானுடைய திருநாமங்களுக்கு அர்த்தஞ்சொல்லப் புறப்படுவது ஸாஹஸமென்றே பட்டர் திருவுள்ளம்போலும்.

பகவத்குணங்களை அற்புதமாக அனுபவிப்பதற்கென்றே அமைந்த இந்த ஸஹஸ்ரநாமத்திற்கு ஆழ்வார்களின் ஈரச்சொற்களில் ஆழ்ந்தவர்களன்றோ பொருள் சொல்ல முன்வரவேண்டும்; அவ்வருளிச்செயல்களுக்கு அதிமாத்ரம் வைதேசிகர்களான புறச்சமயிகள் இதற்குப் பொருளுரைப்பதாக இழிந்து மனம் போனபடியெல்லாம் வியாக்கியானம் செய்திருப்பது என்னே! என்று மிக வருந்திய பட்டர் தாம் வியாக்யானிக்க எம்பெருமானுடைய நியமனம் பெற்றிருந்தார். குணநுபவத்திற்கென்று இட்டுப் பிறந்தவர்களில் தலைவரன்றோ பட்டர். அருளிச்செயலமுதக் கடலில் அல்லும் பகலும் குடைந்தாடி அரும்பெரும் பொருள்களை அற்புதமாக அநுபவித்தும் அநுபவிப்பித்தும் போந்த பரமரஸிக ஸார்வபௌமரான பட்டர் அருளிச்செய்த பாஷ்யத்தை நம்மவர்களிலும் பரிபூர்த்தியாக ஸேவிப்பவர்கள் மிகச் சிலரே. உண்மையில் இந்த பாஷ்யத்தை யநுபவிக்க அதிகாரிகள் துர்லபர்கள்; ஏனென்றால் "பரிசிதமிவ அதாபி கஹநம்—பஹுமுகய வாணீவிலஸிதம்" என்று ஸ்ரீரங்க நாச்சியாரை நோக்கித் தாம் வேண்டினபடியே அதிகம்பீரமான வாக்விலாஸங்களைக் கொண்டே பெரும்பாலும் இந்த பாஷ்யத்தை அமைத்தருளியுள்ளார். ஆகவே இதற்கு அதிகாரிகள் மிகச் சிலரேயாவர். ஒருவாறு அதிகாரம் பெற்றவர்களும் இதைக்கொண்டு போதுபோக்குவதைக் காணோம். 'அவச்யமானபோது எடுத்துப்பார்ப்பது' என்கிற முறையில் இதை எடுத்துப் பார்ப்பவர்கள் சிலருளரேயன்றி ஸ்ரீபாஷ்ய கீதாபாஷ்யாதிகளைப் போலவே இதையும் நியமேந ஸேவிக்கப் பெறுவாரில்லையே யென்கிற நிர்வேதம் நமக்குப் பெரிதுமுளது. திவ்யப்ரபந்தங்களில் அவகாஹனமில்லாமையோடுகூட அவற்றில் த்வேஷமுமுள்ளவர்கள் இந்த பாஷ்யாம்ருத ஸாகரத்தில் இறங்காதிருப்பதே மிக க்ஷேமம் என்றும் நாம் கருதியிருப்பதுண்டு.

இங்ஙனே நாம் பேசத்தக்க பெருமை இந்த பாஷ்யத்துக்கு உள்ளதென்பதை இங்குச் சிறிது நிரூபிக்க விரும்பி ஸஹஸ்ரநாமத்திலிருந்து சில திருநாமங்களை யெடுத்துக்கொண்டு, பிறருடைய பாஷ்யத்திற்காட்டிலும் பட்டருடைய பாஷ்யத்திலுள்ள ஸ்வாரஸ்யாதிசயத்தை ரஸிகர்களுக்கு அழகாக எடுத்துக் காட்டுகின்றோம்.

## — ஸத்க்ருதி: என்ற திருநாமத்தின் விசேஷார்த்தம் —

''ஸத்கதிஸ் ஸத்க்ருதிஸ் ஸத்தா ஸத்பூதிஸ் ஸத்பராயண:'' என்றவிடத்தில் **ஸத்க்ருதி:** என்ற திருநாமத்திற்குப் பிறர் செய்தபொருள் யாதெனில்; ஜகத்ஸ்ருஷ்டி முதலான சிறந்த காரியங்களைச் செய்பவர் என்பது. இப்பொருளை பட்டர் ஒன்றாக மதித்திலர். கீழே *வஸுப்ரதோ வாஸுதேவோ வஸுர் வஸுமநா ஹவி:* என்று வாஸுதேவ நாம ச்ரவணமிருப்பதால் இந்த ப்ரகரணத்திலுள்ள பல திருநாமங்கள் வஸுதேவாத்மஜனான கண்ணபிரானுடைய குணசேஷ்டிதங்களைத் தெரிவிப்பனவாகக்கொண்டு *வஸுரேதா:* என்கிற திருநாமம் முதலாகப் பல திருநாமங்களை க்ருஷ்ணாவதார கதா ப்ரதிபாதகங்களாகவே பட்டர் வியாக்கியானித்தருளினர். ஸ்பஷ்டமாக இப்படியே அவதாரிகையும் இட்டருளினர். 'ஸத்க்ருதி' என்னுமிந்தத் திருநாமம் அந்த ப்ரகரணத்திலிருப்பதால் இதற்குப் பிறர் செய்த பொருள் விரஸமென்று கருதி, தயிர் வெண்ணெய் களவு செய்தது, உரலோடாப்புண்டிருந்தது, குரவையாச்சியரோடு கோத்தது முதலான சிறந்த சேஷ்டிதங்களைச் செய்பவர் என்கிற அழகிய பொருளைச் செய்தருளினர் பட்டர். ஆண்டாள் திருப்பாவையில் ''உன்றன்னைச் சிறு பேரழைத்தனவும் சீறியருளாதே'' என்கிறாள். 'கண்ணா! உனக்குப் பெரிய பெரிய பெயர்களிருக்க அவற்றை விட்டுச் சிறிய பெயரையிட்டு உன்னை யழைத்ததற்காக நீ சீற்றம் கொள்ளலாகாது' என்று இங்கு க்ஷமை வேண்டப்படுகிறது. இங்குச் சிறிய பெயராகக் கருதப்படுவது எது? என்று ஆராயுமளவில் பட்டர் திருவடிகளிலே கேட்ட மஹாசார்யர்கள், 'நாராயணன் தேவாதிதேவன்' இத்யாதி நாமங்கள் சிறியபெயரென்றும், 'கோவிந்தன் கோபாலன் இத்யாதி நாமங்கள் பெரிய பெயரென்றும் அருளிச் செய்கிறார்கள். அவன் உகக்கும் திருநாமம் எதுவோ அதுவே பெருமை பெற்றதென்றும், அவன் வெறுக்கும் பெயரே சிறுமை பெற்றதென்றும் கொள்ள வேண்டியிருக்கிறது. திருவாய்ப்பாடியில் இடையர்க்குத் தலைவனாய்வந்து பிறந்து கன்றுகளையும் காலிகளையும் மேய்த்துப் பெருமைபெற நினைத்திருக்கையில் 'கன்று மேய்த்தினிதுகந்த காளாய்!' என்று கூப்பிட்டால் அவன் திருவுள்ள முகக்குமே யல்லது 'நாராயணா! வைகுண்டவாஸா!' என்றால் உகக்குமோ? மிகமிக வெறுப்பன்றோ உண்டாகும். கோவர்த்தன மலையைக் குடையாகத் தூக்கி நின்றபோது அவ்வதிமாநுஷ சேஷ்டிதத்தைக்கண்டு அதிசங்கித்தவர்கள் ''தேவோ வா தாநவோ வா த்வம்?'' (தேவனா நீ?) என்ன; அதற்கு மிகச் சீறினானன்றோ. உங்களில் ஒருத்தனாய் இடையனான வென்னைத் தேவனென்று பழிக்கிறீர்களே பாவிகாள்! என்றாயிற்று அண்டர்கோன் சீறியது. இவற்றுக்கெல்லாம் நன்கு பொருந்தவன்றோ பேசவேணும். *நாராயணனே நமக்கே பறைதருவான்* என்றும் *நாற்றத்துழாய்முடி நாராயணன்* என்றும் அநியாயமாய் உன்னைச் சிறு பேரையிட்டுப் பேசினோமே. கோவிந்தன் கோபாலன் என்கிற பெரும் பெயர்களையிட்டே பேசாத பிழையைப் பொறுத்தருளவேணும் என்று சொல்லுவதாகப் பொருள் கொள்வதே பொருத்தமானதென்று கொண்டு ஆசாரியர்கள் இப்படி வியாக்கியானித்தருளினர்கள் அங்கு. இச்சுவையை யறிய பாக்கியமற்றவர்கள் இற்றைக்கும் இதற்கு விபரீதமான பொருளை யெழுதியும் பேசியும் வரக் காணாநின்றோம். நிற்க, ரஸிகர்கள் 'ஸத்க்ருதி:' என்ற ப்ரக்ருத திருநாமத்தின் பாஷ்யம்

அமைந்திருக்கும் அழகை நோக்கவேணும். ஜகத்ஸ்ருஷ்டி முதலிய வியாபாரங்களே பகவானுக்குச் சிறந்தவை யென்கிறுர் சங்கராசார்யர்; அவையல்ல சிறந்தவை; *நெஞ்சால் நினைப்பரிதால் வெண்ணெயூ ணென்னு மீனச்சொல்லே!* என்றும், *காணுயன் கடிமனையில் தயிருண்டு நெய்பருக நந்தன் பெற்ற ஆனுயன்* என்றும் நம் ஆழ்வார்கள் ஈடுபடும்படியான ஈனச் செயல்களே சிறந்தவை யென்கிறுர் பட்டர். *மத்துறு கடைவெண்ணெய் களவினில் உரவிடையாப்புண்டு எத்திற முரலினேடிணைந்திருந்தேங்கிய எளிவே!* என்று நம்மாழ்வாரை ஆறு மாஸம் மோஹிக்கச்செய்த செயலைவிட்டு மற்றென்றையா 'ஸத்க்ருதி' யென்பது! என்ருயிற்று பட்டர் திருவுள்ளம்பற்றியது.

— விஜிதாத்மா என்ற திருநாமத்தின் விசேஷார்த்தம் —

இனி வேறு திருநாமங்களிற் செல்வோம். "விஜிதாத்மா விதேயாத்மா ஸத்கீர்த்திச் சிந்நஸம்சய:, உதீர்ணஸ் ஸர்வதச் சக்ஷு ரநீசச் சாச்வத: ஸ்திர:" என்றவிடத்துள்ள பல திருநாமங்களுக்குப் பிறருடைய பாஷ்யத்தின் சுவையின்மையும் பட்டருடைய பாஷ்யத்தின் சுவை மிகுதியும் நிரூபிக்கப்படுகின்றன. 'விஜிதாத்மா என்பதற்கு மனத்தை யடக்கினவர்-ஜிதேந்த்ரியர் என்ற கருத்திற் சென்ருர்கள் பிறர். இதில் என்ன சுவையுள்ளது? 'தம் அடிபணிந்தவர்கள் விஷயத்தில் தாம் தாழ்ந்து வெற்றியை அவர்களுக்குக் கொடுத்துத் தோல்வியைத் தாம் ஏற்றுக்கொள்பவர்' என்கிற கருத்தை விவரித்தருளினுர் பட்டர். இதுவன்றே எம்பெருமான் திருவுள்ள முகந்த பொருள். *அடிச்சியோம் தலைமிசை நீயணியாய் ஆழியங் கண்ணவுன் கோலப் பாதம்* என்று பக்தர்கள் விரும்பா நிற்க "மம சிரஸி மண்டநம் கோபிகா தண்டநம்" என்று பேசின பெருமானது திருவுள்ளமுகக்கும் வியாக்கியானமிதுவன்றே; *கூடாரை வெல்லுஞ்சீர்க் கோவிந்தா!* என்ற ஆண்டாள் பாசுரத்திற்கு உட்புகுந்து வியாக்கியானம் செய்தருள்கின்ற ஆசாரியர்கள் "கூடாதவர்களைத் தோற்கடிப்பதும் கூடுமவர்களுக்கு நீ தோற்றிருப்பது மன்றே உன் இயல்பு" என்று கருத்தை விவரித்தருளுகிறுர்கள். அதற்கு வழிகாட்டியாகவுள்ளது இவ்விடத்து பாஷ்யம்.

— விதேயாத்மா என்ற திருநாமத்தின் விசேஷார்த்தம் —

இதற்கடுத்த திருநாமத்திற் செல்வோம். 'விஜிதாத்மா விதேயாத்மா' என்ற இவ்விடத்தில் அகாரப்ரச்லேஷமிருப்பதாகக் கொண்டு 'அவிதேயாத்மா' என்று பதம் பிரித்து அதற்குத் தகுந்த பொருளையுரைத்தனர் பிறர்; [யாருக்கும் விதேயப்படாத ஸ்வரூபமுள்ளவரென்பதாக.] பட்டர் *விதேயாத்மா* என்றே திருநாமமாகக்கொண்டு, நிற்பதோ இருப்பதோ கிடப்பதோ போவதோ வருவதோ உண்பதோ எல்லாவற்றிலும் பக்தர்களினுடைய கட்டளைக்கு விதேயப்பட்டிருக்கும் ஸ்வரூபமுள்ளவர் என்று இவ்வழகிய கருத்தைக் காட்டியருளினுர். *கணிகண்ணன் போகின்ருன் காமருபூங்கச்சி மணிவண்ணு! நீ கிடக்க வேண்டா* என்றவாறே பைந்நாகப்பாய் சுருட்டிக்கொண்டு கிளம்புவதும், *பைந்நாகப்பாய் விரித்துக்கொள்* என்ருல் அப்படியே மீண்டு வந்து விரித்துக்சொள்வதுஞ் செய்து திருமழிசைப்பிரான் போல்வார் திறத்தில் சொன்ன வண்ணஞ் செய்த பெருமா

ளென்றும் யதோக்தகாரி யென்றும் திருநாமம் படைத்து டக்தவிதேயனை யை விகிதபடிதமாக்கியிருக்கின்ற எம்பெருமானது திருவுள்ள முகக்கவேணுமானால் 'விதேயாத்மா' என்னுது வேறு வகையாகச் சொல்லலாகுமோ? ☼ஜ்ஞாநீது ஆத்மைவ மே மதம்☼ என்று கீதையிற் கூறியிருக்கின்ற எம்பெருமானுடைய திருவுள்ளந்தான் என்ன? ஞானிகளுக்கு நான் சரீரபூதனென்று ஸர்வசரீரியான பகவான் தானே வாய்விட்டுச் சொல்லுகின்றான். ஆத்மாவைக் குறித்து ஸர்வாத்மநா விதேயமாயிருக்கையன்றோ சரீர லக்ஷணம். ஞானிகளுக்கு விதேயனல்லனாகில், *ஜ்ஞாநீ து ஆத்மைவ மே மதமென்று அவன்தான் கூறினதும் அதற்கு மஹாசார்யர்கள் அழுத்தம் திருத்தமாக வியாக்கியானமிட்டருளினதும் என்னாகும்? தனது விதேயத்வத்தை வாயாற் சொன்னவளவன்றிக்கே அனுஷ்டானத்திலுமன்றோ காட்டியருளா நின்றான். "ஸேநயோருபயோர் மத்யே ரதம் ஸ்தாபய மே அச்யுத!" என்று அர்ஜுனன் கட்டளையிடவும் அப்படியே தான் செய்யவும் பாங்காக வன்றோ தன்னை யமைத்து வைப்பது; பார்த்தஸாரதியென்று பெயர் சுமந்து நிற்கிறானே நாம் பார்த்த சாரதியன்றோ.

— ☼ச்சிந்நஸம்ஶய: என்ற திருநாமத்தின் விசேஷார்த்தம் —

அடுத்த திருநாமத்திலும் செல்வோம். ச்சிந்நஸம்சய: என்றொரு திருநாமம். 'எல்லாவற்றையும் கையிலங்கு நெல்லிக்கனிபோல் எப்போதும் பார்ப்பவராதலால் ஸந்தேஹமற்றவர்' என்ற கருத்தில் பாஷ்யம் செய்தனர் பிறர். ஐயம் திரிபு மறப்பு முதலானவை யில்லாமை ஞானத்திற்கு அதிசயம். ஆகவே பகவான் அதிசயித்த ஞானம் படைத்தவர் என்றதாயிற்று. இப்பொருள் ஸஹஸ்ரநாமத்தில் மற்றும் பல திருநாமங்களாலும் வெளிவந்ததே. இதில் சுவையொன்றுமில்லை யென்று கருதிய பட்டர் அழகாக வியாக்கியானித்தருளியுள்ளார்! இதற்குமுன்னேயுள்ள ஸத்கீர்த்தி: என்ற திருநாமத்திற்குப் பிறர்போல் ஸாமான்யமான பொருளைப் பணியாமல் 'ஸௌலப்ய மிருப்பதினாலேயே யதார்த்தமான புகழைப் பெற்றவர்' என்று ப்ரக்ருதாநுகுணமாகப் பொருளருளிச் செய்தவராதலால் ச்சிந்நஸம்சய: என்ற இத் திருநாமத்திற்கும் அதையொட்டியே அழகிய பொருள் பணிக்கின்றார்! அதாவது எம்பெருமான் விஷயத்தில் தெளிவு பெறாதவர்களுக்குப் பலவகையான ஸந்தேஹங்களுண்டாகுமாம்; அவர் அறியக்கூடியவரோ அறியக்கூடாதவரோ; எளியவரோ அரியவரோ? நமக்கு வசப்படுவரோ மாட்டாரோ? என்றிப்படி பல ஸந்தேஹங்கள் தோன்றுமாம்; அவற்றைத் தமது நடத்தையினால் உடனே அறுத்திடுபவராம். தாரித்ரியமின்றியிருப்பவர் என்பதைக் காட்டிலும் பிறரை தாம் தாரித்ரிய மற்றவர்களாகச் செய்பவர் என்பது எப்படி சிறந்ததோ அப்படியேதாம் ஸந்தேஹமற்றிருப்பவர் என்பதைக்காட்டிலும் பிறரை ஸந்தேஹ மற்றவர்களாகச் செய்பவர் என்பது சிறந்ததென்பதை நாம் விவரிக்கவேணுமோ? அதிலும், தம்முடைய பரத்வத்தைக் காட்டி ஸந்தேஹ மறுப்பவரென்னாமல் தம்முடைய எளிமையைக்காட்டி ஸந்தேஹ மறுப்பவரென்றுரைத்தது ரஸவத்தரம்.

— அநீஶ: என்ற திருநாமத்தின் விவரணம் —

அவ்விடத்திலேயே அநீஶ: என்ற திருநாமத்தின் பாஷ்யத்தையும் நோக்குவது. 'தமக்குமேல் ஈச்வரனில்லாதவர் அநீஶர்' என்றார் பிறர். 'தமக்குத்தாம்

கடவரல்லாதவர் – பக்த பராதீநத்வத்தாலே ஸ்வாதந்த்ரியமிழந்தவர் [அநீசர்] என்றருளிச் செய்கிறார் பட்டர். *வில்லிபுதுவை விட்டுசித்தர் தங்கள் தேவரை வல்ல பரிசு வருவிப்பர்* என்று ஆண்டாளருளிச்செய்தபடி பக்தர்கள் வெந்நீரைக் காய்ச்சி, *நாரணா! நீராடவாராய்' *இன்று நீ நீராடவேண்டு மெம்பிரானேடாதே வாராய்* என்றழைத்தால் நீராட வோடிவருவதும், சில பூக்களைப் பறித்துக் கையிலேவைத்துக்கொண்டு *செண்பகப் பூச்சூட்டவாராய்* என்றும் *இருவாட்சிப் பூச்சூட்ட வாராய்* என்றுமழைத்தால் பூச்சூடவோடி வருவதுமான எம்பெருமானை எந்த பாஷ்ய முகப்பிக்குமென்று ரஸிகர்கள் விமர்சிக்கக் கடவர்கள்.

— ஸம்மித: என்ற திருநாமத்தின் பொருள் விவரணம் —

இனி மற்றோரிடத்திற்குச் செல்வோம். *வஸுர்வஸுமநாஸ் ஸத்யஸ் ஸமாத்மா ஸம்மிதஸ் ஸம:* என்றவிடத்தில் *அஸம்மித:* என்று திருநாமமாக்கி அபரிச்சிந்நர் என்கிற பொருளைக் காட்டினர் பிறர். விலை கொடுத்து வினை வாங்கு மாப்போலே இல்லாததொரு அகாரத்தைக் கொண்டு கூட்டி ஏதுக்கு இந்தச்சுவைக் கேடான பொருளைப்பணிக்கவேண்டுமென்று நிர்வேதங்கொண்ட பட்டர்(ஸம்மித:) என்றே கொண்டு *ஸர்வப்ரகாரத்தாலும் அடியார்களுக்குப் பரிச்சிந்நரேயாவர் என்கிறார். *அழுகையு மஞ்சி நோக்குமந்நோக்கும் அணிகொள் செஞ்சிறுவாய் நெளிப்பதுவும், தொழுகையுமிவை கண்டவசோதை தொல்லையின்பத்திறுதி கண்டாளே* என்ற பெருமாள் திருமொழிப் பாசுரத்தில் 'தொல்லை யின்பத்து இறுதி கண்டாள்' என்பதற்கு தொல்லையின்பமாகிய பகவானை [அபரிச்சிந்நனென்று ஓதிக்கிடப்பதற்குப் பிரதியாச]ப் பரிச்சின்னனாகக் கண்டாள் யசோதை—என்று சொல்லிப்போருவதொரு இன்சுவைப் பொருளுக்கு ஆகரம் பட்டரேயாவர்.

*நியந்தா நியமோ யம:* என்கிறவிடத்திலும் *ஆதாரநிலயோ தாதா* என்கிறவிடத்திலும் "அநியம: — நியம:." அயம:— யம: "அதாதா—தாதா" என்று இரண்டுபடியாகவும் பதச்சேதம் செய்து வியாக்யானமிட்ட பிறர் *விஜ்ஞாதாத்மா விதேயாத்மா* என்றவிடத்திலுங்கூட அப்படியே இரண்டுவிதமாகவும் பதச்சேதம் பண்ணி இரண்டு வகைப் பொருள்களையும் காட்டலாமாயிருந்தும் ஏன் காட்டவில்லை? என்று ஆராயுமளவில், பகவத் குணங்களிலே ஆழங்காற்படுவதற்கீடான திவ்ய ப்ரபந்தரூப அம்ருத ஸாகர அவகாஹனம் பட்டர்க்குப்போல் பிறர்க்கு இல்லாமையினால்தான் என்று ஸ்ரீவைஷ்ணவர்கள் அறுதியிடலாம்.

பரத்வம் ஸௌலப்யம் என்கிற இரண்டு வகுப்புகளுக்குரிய பெருமைகளும் எம்பெருமானிடத்து உள்ளன. இரண்டையும் அநுபவிக்க நாம் இட்டுப் பிறந்திருக்கிறோம். ஆனாலும் அநுபவத்தில் நெஞ்சை நீர்ப்பண்டமாக்குமவை எளிமைக் குணங்களே யன்றிப் பரத்வகுணங்களல்ல; நம்மாழ்வார் *உயர்வற வுயர்நல முடையவன்* என்று தொடங்கிப் பரத்வத்தை யநுபவித்தவர் சிறிதும் விகார மடையாமல் பேசிப் போந்தார்; அவர்தாமே *எத்திறமுரலினோடிணைந்திருந்தேங்கிய வெளிவே* என்றும் *பிறந்தவாறும் வளர்ந்தவாறும்* என்றும் பேசி அவ்வாறுமாஸம் மோஹித்து உணர்த்தியற்றுக்கிடந்தார். இதனையே ஆழ்வான் அதிமாநுஷஸ்தவத்தில், *தாத்ருக் ந தே சரிதம் ஆர்யஜநாஸ் ஸஹந்தே* என்றும்

*ஆர்த்ரீகரோதி விதுஷாம் ஹ்ருதயம் ததேதத்* என்றுமருளிச் செய்தார். ஆகவே எளிமைக் குணங்களையே பெரும்பாலும் விவரிக்க நம் ஆசார்யர்கள் குதூஹலிக்கின்றார்கள்—இதுவே ஆழ்வார் காட்டியருளின வழியென்று கொண்டு.

இதனால் பரத்வத்திற்கு உள்ளீடான குணங்களில் இவர்கள் பகையும் பொறாமையுமுடையவர்களென்று அர்த்தமல்ல, அக்குணங்களையும் அபரிமிதமாக அருளிச்செய்தே போருகிறார்கள். எளிமைக்குணங்களையநுபவிக்க இடம் வாய்ப்பாகக் கிடைக்குமானால் அவ்விடத்தையுபேக்ஷியாது நன்கு பற்றுகிறார்கள்.

உருக்கமான அர்த்த விசேஷங்களை யருளிச்செய்வதில் எம்பெருமானாரைக் காட்டிலும் பட்டர் மிக வல்லவரென்பது பகவத்விஷய திவ்யக்ரந்த ரஸிகர்களுக்கு அறியவெளிது. மஹாமேதாவியான இவருடைய புத்திக்கு அநாயாஸமாக கோசரிக்கும் பொருள் மற்றையோருடைய புத்திக்கு ச்ரமப்பட்டும் க்ரஹிக்க முடியாதென்றால் இது அதிசயோக்தியன்று; சிலவிடங்களைக் கொண்டு இதையும் மூதலிப்போம்.

### — *அநர்த்த:—*மஹா கோஶ:* என்ற திருநாமங்களின் சுவைப்பொருள் —

இந்த ஸஹஸ்ரநாமத்திலே *அர்த்தோநர்த்தோ மஹாகோஶ:* என்றவிடத்தில் அநர்த்த: என்கிற திருநாமத்தை வியாக்கியானிக்கிற பிறர் 'தாம் விரும்பவேண்டிய பொருளில்லாதவர்' என்று உரைத்தனர். இது நம்போல்வார்க்கும் தோற்றக்கூடிய பொருளே. பட்டர் அருளிய பொருளோவென்னில்; அற்ப பலன்களை விரும்பக்கூடிய பாக்கியஹீனர்களால் விரும்பப் படாதவர்—என்பதாக. இதற்கடுத்தபடியாகவுள்ள மஹாகோஶ: என்கிற திருநாமத்திற்கு 'அந்நமய ப்ராணமயாதிகளான ஐந்து மஹாகோஶங்களில் இருப்பவர்' என்கிற பொருள் பிறரால் உரைக்கப்பட்டது. அர்த்திகளான பக்தர்களுக்கு அளவிறந்து கொடுத்தாலுங்கூட ஒருநாளுங் குறைபடாத நவநிதிகளையும் ரத்நாகரங்களையும் தம்முடைய பொக்கிசமாகவுடையவர்' என்பது பட்டரருளிச்செய்த பொருள். இப்படியாக நாம் எடுத்தநுபவிக்கக்கூடிய அற்புதமான பொருள்கள் அளவு கடந்து விளங்குகின்றன இவ்வாசிரியருடைய பாஷ்யத்தில். ... ... *

## மொய்ம்பால்வளர்த்த இதந்தாய் இராமாநுசன் ☆

*திருவாய்மொழித் தனியன்களில் ஒன்றான *வான் திகழுஞ்சோலைப் பாசுரத்தின் பிற்பகுதி இது. இது பட்டரருளிச்செய்த வெண்பா. 'திருவாய்மொழியைப் பெற்ற தாய் நம்மாழ்வார்; வளர்த்த த்தாய் எம்பெருமானார்' என்கிறது இதில். மணவாள மாமுனிகளருளிச் செய்த உடையவரது வாழிதிருநாமத்திலும் *மாறனுரை செய்த தமிழ்மறை வளர்த்தோன்வாழியே* என்றருளிச் செய்யப்பட்டுள்ளது. திவ்யப்ரபந்தங்களை எம்பெருமானார் வளர்த்தவிதம் யாது? என்று பலர் கேட்பதுண்டு. விளங்கச் சொல்லுகிறேன் கேண்மின். *சொல்லார் தமிழொரு மூன்றும் சுருதிகள் நான்கும் எல்லையில்லாவறநெறி யாவுந் தெரிந்தவன்* என்று இராமாநுச நூற்றந்தாதியில் (44) போற்றப் பெற்ற எம்பெருமானார்க்குத் தமிழறிவில்

சங்கிப்பார் ஆருமில்லை. திவ்யப்ரபந்தங்களிலுள்ள அர்த்த விசேஷங்களை ஸ்ரீபாஷியத்திலும் கீதாபாஷ்யத்திலும் கத்யத்ரயத்திலும் ஆச்சரியமாகப் பதியவைத்தருளியிருப்பதை அடியேன் த்ரமிடோபநிஷத் ப்ரபாவ ஸர்வஸ்வ நூலில் விரியவுரைத்திருப்பது தவிர உபந்யாஸங்கள் தோறும் விளக்கி வருவதை உலகமுணரும். முக்கிமாக நிரூபிக்க வேண்டிய விஷயங்களைப் புறச்சான்று கொண்டும் அகச்சான்று கொண்டும் மூதலிப்பது முறை. இவ்விஷயத்தில் "ஏய்ந்த பெருங்கீர்த்தி யிராமானுச முனிதன், வாய்ந்த மலர்ப்பாதம் வணங்குகின்றேன்—ஆய்ந்த பெருஞ், சீரார் சடகோபன் செந்தமிழ் வேதந்தரிக்கும், பேராதவுள்ளம் பெற" என்பது முதலான தனியன்களும், "மாறனடிபணிந்துய்ந்தவிராமானுசன்" என்பது முதலான இராமானுச நூற்றந்தாதிப் பாசுரங்கள் பவபலவும் புறச்சான்றுகளாம். அவற்றைவிட் அகச்சான்றுகளையே அடியேன் அதிகமாகக் காட்டுபவன். எம்பெருமானாருடைய திவ்யஸூக்திகளில் அருளிச்செயல் விசேஷார்த்தங்களே அதிகமாகக் கமழ்கின்றன வென்பதைச் சில பாக்கியசாலிகளே அறிந்து அநுபவிக்க வல்லவர்கள். ஆளவந்தார் ஸ்ரீஸூக்திகளில் இது பரிமிதம். உடையவர் ஸ்ரீஸூக்திகளில் கொள்ளை கொள்ளையானவை. நிதிபோல் புதைந்து கிடப்பவை.

க்ருஹ திருவாராதனத்தில் அருளிச்செயல்ஸேவித்துச் சாத்துமுறைசெய்ய வேணுமென்பதை ஸ்வாமி தமது நித்ய க்ரந்தத்தின் முடிவில் "ச்ருதிஸுகை: (ஸூக்தை:) ஸ்தோத்ரை: அபிஷ்டூய" என்பதனால் காட்டியருளினர். ¤செவிக்கினிய செஞ்சொற்களாலே¤ என்றபடி. இவ்வண்ணமாகவே நுட்பமாகக் காட்டியருள்வது எம்பெருமானாரியல்பு. சிகரமானவொரு விஷயத்தை இங்குப் பொறித்திடுகின்றேன்- ஸ்ரீ பாஷ்யத்தில் கடைசியாக முடிக்கும் ஸ்ரீ ஸூக்தி என்னவென்று பார்ப்போம் "ய ஏவமாஹ" என்றாரம்பித்து 'வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப:¤ இதி என்பது ஸ்ரீபாஷ்யத்தின் முடிவான ஸ்ரீஸூக்தி. ஸூத்ரம் என்னவென்றால் ¤அநாவ்ருத்திச் சப்தாத்¤ என்பது. "முக்தாத்மா திருநாட்டிலிருந்து திரும்பி வருவதில்லை, சாஸ்த்ரம் அங்ஙனே சொல்லியிருக்கையாலே" என்பது ஸூத்ரத்தின் பொருள்; சாஸ்த்ரம் இன்னதென்பதைக் காட்டவேண்டும்; அது காட்டியாயிற்று. ¤ஸ கல்வேவம் வர்த்தயந்¤ இத்யாதியான உபநிஷத் வாக்யமும் ¤மாமுபேத்ய து கௌந்தேய! புநர்ஜந்ம ந வித்யதே¤ என்கிற கீதாவசனமும் காட்டியாயிற்று. ஸூத்ர வியாக்கியானம் செவ்வனே முடிவு பெற்றதாயிற்று பின்னை ¤ப்ரியோ ஹி ஜ்ஞாநிந:¤ என்று தொடங்கி ¤ஸ மஹாத்மா ஸுதுர்லப:¤ என்னுமளவாக விஸ்தரம் செய்திருப்பது எதற்காக? என்று விமர்சிக்க வேண்டுவது மிக அவசியமாகும். விஜ்ஞாபிக்கிறேன், குறிக்கொண்மின்.

ஸூத்ரகாரர் கூறியபடி [சப்தாத் என்று சொன்னபடி] சாஸ்த்ரத்தைக் காட்டி, மீட்சியில்லையென்பதை நிரூபித்தாயிற்று. அதன் மேலும்பூர்வபக்ஷம்தோன்றும்; ஈச்வரனே கேட்பாரற்ற சுதந்திரன்; நிரங்குசஸ்வதந்த்ரனெனப்படுகிறான். ¤நாஸௌ புருஷகாரேண ந சாபி அந்யேந ஹேதுநா, கேவலம் ஸ்வேச்சயை வாஹம் ப்ரேக்ஷே கஞ்சித் கதாசந¤ என்று பேசுபவன். அவன் சாஸ்த்ரத்தையும் மீறி முக்தாத்மாவை நோக்கி 'மீண்டொழிந்து போ' என்று சொல்லித் தள்ளி விட்டால் தடுப்பாருண்டோ? யாரே தடுக்கவல்லார்? என்று சோத்யம் விளைந்தே

தீரும். இந்த சோத்யம் சங்கராசார்யாதிகளான இதர பாஷ்யகாரர்களுக்குத் தோன்றவில்லை, நமது பாஷ்யகாரருக்குத் தோன்றிற்று. அருளிச்செயற்கடலில் அமுதமானவொரு பொருளையெடுத்து வெளியிடுவதற்காகத் தோன்றிற்று; அதைப் பூர்வபக்ஷமாக வைத்துக் காட்டாமல் ஸமாதானத்தை மட்டும் மிகவழகாகக் காட்டியருளினர்—"நச பரமபுருஷஸ் ஸத்யஸங்கல்ப: அத்யர்த்தப்ரியம் ஜ்ஞாநிநம் லப்த்வா கதாசித் ஆவர்த்தயிஷ்யதி" என்கிற ஸ்ரீ பாஷ்யஸூக்தியாலே. இதன் பொருளாவது—எம்பெருமான் தன்னுடைய பரமப்ரீதிக்கு இலக்கான ஞானியை ஒருநாளும் திருப்பியனுப்பமாட்டானென்பதாம். இவ்விஷயத்திற்கு ப்ரமாணயாக "ய ஏவ மாஹ" என்று தொடங்கி ✡ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோத்யர்த்தம் அஹம் ஸ ச மம ப்ரிய:✡ என்கிற கீதாச்லோகத்தை [பகவத் வசனத்தை] எடுத்துக் காட்டினர். அவ்வளவே போதுமானது. அதற்குமேலும் ✡வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப:✡ என்னுமளவும் எதற்காக எடுத்துக் காட்டினரென்று ஆராய வேண்டும். கேண்மின்; கீழே காட்டிய ஸ்ரீ பாஷ்ய பங்க்தியில் "அத்யர்த்த ப்ரியம் ஜ்ஞாநிநம் ந கதாசித் ஆவர்த்தயிஷ்யதி" என்றிவ்வளவே ஸாதித்திருக்கவில்லை. இடையில் [லப்த்வா] என்றொரு விலையுயர்ந்த பதத்தை ப்ரயோகித்தருளியுள்ளார். அந்தப் பதம் இல்லாமலே வாக்கியம் அந்வயிக்காமற் போகாது. எளிதாக அந்வயிக்கும். "அத்யர்த்தப்ரியம் ஜ்ஞாநிநம் ந கதாசித் ஆவர்த்தயிஷ்யதி" என்றால் இதில் அநந்வயம் ஒன்றுமில்லையே இடையில் லப்த்வா என்றொரு பதத்தை இடடருளினது த்ராவிட வேதாந்த ஸாரார்த்த பரமார்த்தத்தை விளக்குவதற்கேயாம். 'சேதநலாபம் ஈச்வரனுக்கே யொழிய ஈச்வரலாபம் சேதனனுக்கன்று' என்கிற ஸத்ஸம்ப்ரதாயார்த்த நிதியன்றோ இங்கு வாரியளிக்கப்பட்டது.

ஆழ்வார் ✡யானொட்டி யென்னுள் இருத்துவமென்றிலன், தானொட்டிவந்தென் தனி நெஞ்சை வஞ்சித்து, ஊனொட்டி நின்றென்னுயிருள் கலந்து, இயல்வானொட்டுமோ இனியென்னை நெகிழ்க்கவே.✡ (திருவாய்மொழி 1—7—7) என்றருளிய பாசுரத்தை அக்ஷரச: அடியொற்றியன்றோ ஸ்ரீ பாஷ்யஸூக்தி அவதரித்துள்ளது. ஜ்ஞாநியான வொருவனைப் பெறுவதற்கு எம்பெருமான் எவ்வளவோ பாடுபட்டவனாயிருந்து, அப்படிப்பட்ட ஞானியைப் பெற்றபினபும் போய்விடு என்று தள்ளுவனோ? என்கிற பொருள் தோன்றவே [லப்த்வா] என்கிற பதத்தைச் சேர்த்தருளினர்; எம்பெருமான் ஞானியான சேதனனைத் தேடுகிறான், தேடிப் பெற்றால் களிக்கிறான், பெறாவிட்டால் வருந்துகிறான் என்பதைக் காட்டவே, [லப்த்வா] என்ற தமது ஸூக்திக்கு ப்ரமாணமாகவே ✡ஸ மஹாத்மா ஸுதுர்லப:✡ என்னுமளவும் உதாஹரித்தது. இத்தகைய பல நூறு அருளிச் செயலர்த்த விசேஷங்களை அமைத்தருளினதுபற்றி *மொய்ம்பால் வளர்த்த இதத்தாய் இராமானுசன்* என்று பணித்தது.

முக்கியமாக ஒன்று-'ஸர்வதேச தசாகாலேஷு அவ்யாஹத பராக்ரமா, ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்ததாம் அபிவர்த்ததாம்' என்கிற ச்லோக ரத்னத்தை ஸ்ரீ பாஷ்ய காலக்ஷேபாதிகளில் ஸேவிக்கின்றிலோம். பகவத்விஷய ரஹஸ்யாதி காலக்ஷேபங்களிலும் ஸேவிக்கின்றிலோம். அருளிச்செயல் கோஷ்டிகளில் மட்டுமே ஸேவித்து வருகிறோம். இதனாலும் ✡மொய்ம்பால் வளர்த்த இதத்தாயான இராமாநுசருடைய பெருமையை யுணரலாம். அருளிச்செயல் சேவைக்கு ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞையே மூலம் என்னுமிடம் விளங்கவில்லையா? ... ... ... *

# புஸ்தக விமரிசனம்

"திருமாலடியார்கள்" என்றொரு சிறு புத்தகம் வரப்பெற்றோம். இதை விமரிசனம்செய்ய நமக்குச் சிறிதும் மனமில்லை. ஆயினும் அதைச் சிலரோ பலரோ கண்டு மருளக்கூடுமென்று தோன்றியதனாலும், அதன் ஆசிரியர் "இந்நூல் இன்னும் செவ்விதின் அமைய யோசனைகள் கூற வாசகர்களைக் கேட்டுக்கொள்கிறேன்" என்று எழுதியிருப்பதனாலும், உடனே நம்முடைய ப்ரஸ்தாவத்தையும் அவர்தாமே செய்திருப்பதனாலும் சிறிது விமரிசனம் செய்தேயாகவேணுமென்று தோன்றியது. "ஆசிரியர் நன்றியுரை" என்ற மகுடத்தின்கீழ் அவர் எழுதியுள்ளதாவது,

"அடியேன் வேண்டுகோட்குச் செவிசாய்த்து, அடியேனுக்குத் திருவாய்மொழி ஆயிரத்தையும் அவருடைய தீபிகை உரையுடன் உவந்து வழங்கிய ஞான வள்ளல், காஞ்சீபுரம் பிரதிவாதிபயங்கரம் ஸ்ரீ அண்ணங்கராச்சாரியர் சுவாமிக்கு அடியேன் வணக்கத்தையும் நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறேன். இச்சந்தர்ப்பத்தில், அடியேனை ஸ்ரீ அண்ணங்கராச்சாரியார் சுவாமிக்கு அறிமுகப்படுத்தி உடனிருந்து உதவிய ஸ்ரீ எ சே. வரததேசிகாச்சாரியாருக்கு அடியேனின் நன்றிகலந்த வணக்கம்" என்பது.

இச்சுவடியில் இந்த வாசகங்கள் எதற்காகப் புகுத்தப்பட்டனவென்று அறிகின்றிலோம், நம்முடைய தீபிகையுரையிலிருந்து கிரஹிக்கப்பட்ட விஷயங்களே இச்சுவடியில் இடம்பெற்றுள்ளனவென்று சிலர் எண்ணிக்கொள்வதற்காகவா? இவர் இச்சுவடியோடுகூட நமக்கெழுதியனுப்பிய கடிதமொன்றில் 'தேவரீருடைய நூல்களைப் படித்ததனாலும் உபந்யாஸங்களைக் கேட்கப்பெற்றதனாலும்......' என்று எழுதியுள்ளார். இச்சுவடியில் என்னுடைய அபிப்ராயங்களுக்கு மாறான விஷயங்களே பெரும்பாலும் இடம்பெற்றிருப்பதனால் அஃது உண்மையுரையல்ல. ஸ்ரீவைஷ்ணவ ஸார்வபௌமர்கள் சிறிதும் ஸஹிக்கமாட்டாத விஷயங்கள் இச்சுவடியில் முக்கியமானவை இரண்டு;—1. அரியும் அரனும் ஒன்று என்பதைப் பலகால் எழுதியிருப்பது. 2. ஆழ்வார்களின் காலநிலையைப்பற்றி நேர்மையின்றி எழுதியிருப்பது. மற்றுஞ் சிலவோ பலவோ இருந்தாலும் இவையிரண்டும் முக்கியமானவை.

ஓர் பழையகதை கேளீர். "காழியூர் சேஷாத்ரி மணவாளன்" என்று தமது பெயரைத் தெரிவித்திருக்கின்ற இவருடைய திருத்தந்தையார் காலத்தில் திருவத்திபுரமென்னுமூரில் பானுகவி யென்கிற சைவப் புலவரொருவர் "அரியுஞ் சிவனும் ஒன்று" என்று கொட்டை யெழுத்தில் விளம்பரங்கள் அச்சிட்டு "என்னோடு வாதம் புரிய வருபவர்கள் வாருங்கள்" என்று அட்டஹாஸம் செய்துகொண்டிருந்தார். அப்போது இவரது திருத்தந்தையாரும் பெரிய தகப்பனாரும் அந்த அட்டஹாஸங்களைச் சகிக்ககில்லாமல் திருவத்திபுரத்தில் சபை கூட்ட நிச்சயித்து என்னை நிர்ப்பந்தமாக அழைத்துச் சென்றார்கள். முன்னடியே விளம்பரமும் அச்சிட்டுப் பிரசுரம் செய்திருந்தார்கள். இது 1913ஆம் ஆண்டில் என்று ஞாபகம். கடைவீதியில் பெரிய பந்தல்போட்டுக் கூட்டங்கூட்டினார்கள். பானுகவி யென்பவர் ஏதோ சாக்கு போக்கு தெரிவித்துக் கூட்டத்திற்கு வாராதேபோயினர். கூடின பெருங்கூட்டத்

திற்கு நாம் நம்மாலான செவியுணவு அளித்துவிட்டுத் திரும்பினோம். அந்த சைவப் புலவர் என்னென்ன சொல்லிக்கொண்டிருந்தாரோ, அவற்றையே இந்த வைண வர் தமது சுவடியில் கூசாமல் பொறித்துள்ளார்.

ஆரியர்காள்! மிக முக்கியமாக ஒன்று குறிக்கொள்ளவேண்டும். "அரியும் அர னும் ஒன்று" என்னுமிந்த விஷயத்தில் சைவர்களுக்கு பதில் சொல்லவேண்டியமுறை வேறு. வைணவரென்று தம்மைத் தெரிவித்துக்கொள்ளுமிவர் ஆழ்வார்களனை வரையும் ஆசாரியர்களனைவரையும் ப்ரமாணிகர்களாகப் போற்றுபவராய்த் தெரிவதனால் இவருடைய மருளைப்போக்கும் விஷயத்தில் நாம் அதிகமாகச் சிரமங் கொள்ளவேண்டாவென்று நினைக்கிறோம். துர்வாதிகளைப்போல் ஒரு பிடிவாதங் கொண்டு இவர் எழுதியுள்ளாரென்று நமக்குத்தோன்றவில்லை, ஸதாசார்ய ஸேவா பாக்கியமில்லாமையினாலே ஸம்பிரதாய விஷயங்களில் சிறிதும் பிரவேசமற்றுச் சொற்களையும் பொருள்களையும் ஆரியர்கள் அருவருக்கும்படியாகவே பெரும் பாலுமெழுதியுள்ளார். விரிவுக்கு அஞ்சிச் சில காட்டுகிறோம் காண்மின்.

1. ஸம்பிரதாயத்தில் புருஷகாரம் என்பது ஒரு சொல். இதைப் பிரசங்க மேடைகளில் பெரியார் கூறக்கேட்டும் கீழ்ச்சாதியர் புருஷாகாரம் என்றே வழங்கு வர். திருத்தினாலும் திருந்தார்கள். இவரும் தம் சுவடியில் ஆதியோடந்தமாகப் பன்முறையும் புருஷாகாரமென்றே எழுதித் தீர்த்துவிட்டார். ஸ்த்ரீ ஆகாரத் திற்கு எதிரிடையான சொல் புருஷாகாரமென நினைத்துவிட்டார் பாவம்! பிராட்டி ஸ்த்ரீயான ஆகாரத்தை விட்டிட்டுப் புருஷ ஆகாரத்தை யேற்றுக்கொள்வதாக நினைத்துவிட்டார்போலும்.

2. எம்பெருமானாருக்குத் திருப்பாவை ஜீயரென்று ஒரு ப்ரஸித்தியுண்டே; ஆண்டாளுக்குப் "பெரும்பூதூர் மாமுனிக்குப்பின்னானாள்" என்றொரு ப்ரஸித்தியு முண்டே; இவற்றைப்பற்றி எழுதுகின்றவிவர் அந்தோ! ஸ்ரீ வைஷ்ணவர்களின் கண்ணில் குருதிகுழம்பி யெழும்படியாக வெழுதியுள்ளார்.

> "உடையவர் பிக்ஷைக்கு திருப்பாவையைப் பாடிக்கொண்டே போவர்; திருக்கோட்டியூர் நம்பிக்கு அத்துழாயென்று ஒரு குமார்த்தி, உடையவர் பாசுரத்தை உள்ளமுருகப் பாடிக்கொண்டே நம்பி வீட்டு வாசலில் வந்தார். வீட்டினுள்ளே அத்துழாய் பந்து விளையாடிக் கொண்டிருந்தாள். வாசற் பக்கம் கீதம் கேட்டு வீட்டுக் கதவைத் திறந்துகொண்டு வெளியே வந்தாள், அப்போது உடையவர் அத்துழாய் காலில் சாஷ்டாங்கமாக விழுந்தார். அது கண்டு ராவண ஸன்னியாசிபோன்றவரோ இவர்! என்று அத்துழாய் ஐயுற்றுத் தந்தையிடம் சென்று இப்படி முறைகேடாக நடந்ததைச் சொல்லி முறை யிட்டாள்"………

அந்தோ! ஒரு ஸ்ரீவைஷ்ணவரா இப்படி யெழுதுவது! திருக்கோட்டியூர் நம்பிக்கு அத்துழாயென்று ஒரு திருமகளார் இருந்ததாகவே வைத்துக்கொள்வோம்; திருப்பாவையை ஸங்கீதம் பாடிக்கொண்டா உடையவர் எழுந்தருளினார்? 'திருக் கோட்டியூர்நம்பிவீடு என்று எட்டிடங்களில் எழுதுகிறார். கீழாருங்கூட 'ஸ்வாமி திருமாளிகையில் எல்லாரும் பாங்கா?' என்கிறார்கள். நம்பி திருமாளிகையென்று

ஓரிடத்தில்கூடக் காணவில்லையே! இதெல்லாங் கிடக்கட்டும்; ஸ்வாமியை ராவண ஸந்நியாசியோவென்று அத்துழாய் ஐயுற்றுளென்று ஒரு ஸ்ரீவைஷ்ணவர் கையில் எப்படித்தானெழுத வந்ததோ! இதை யுதாஹரித்ததும் நமக்குப் பெரும்பாதகம்.

3. இச்சுவடியில் திவ்யப்ரபந்தப் பாசுரங்களும் உபதேச ரத்தினமாலைப் பாசுரங்களும் பலபல கையாளப்பட்டுள்ளன. அவற்றுக்கு விளைந்துள்ள தண்டனைகளை என்சொல்லுவோமந்தோ! திருக்குடந்தைப் பதிகத்தில் *வாராவருவாய் வருமென்மாயா* என்னும் பாசுரத்தைப் பூர்த்தியாக உதாஹரிக்கிறூர்; முதலடியில் ஒருபதத்தை அறவே விட்டிட்டார். தொலையட்டும்; இரண்டாமடியைக்கேளுங்கள்.

ஆராவமுதாய் அடியேன் அம்மே திருக்குடந்தாய்

என்றெழுதியுள்ளார். வயிறு குலுங்கச் சிரித்த சிரிப்பு அடங்கவேயில்லை, பெருமாள் திருமொழிப் பாசுரமொன்றில் ''அன்னனையபொற்குவடாய் அனந்தபத்மநாபேனே'' என்றுரொருவர். வியாகரணத்தில் ஆதேஶமென்று ஒன்றுண்டு, நீலோத்பலம் என்கிற ஸம்ஸ்க்ருத பதத்திற்கு ப்ராக்ருதத்தில் கந்தோட்டம் என்று. ஆதேஶம். [கந்தொட்டஸாமளங்கோ — இதி ஜாநகீபரிணயே.] (*நீலோத்பலச்யாமளாங்க:*) *ஆவியகமேதித்திப்பாய்* என்கிற சந்தைக்கு (அம்மே திருச்குடந்தாய்) என்கிற ஆதேசம் எந்த ஸூத்ரத்திஞலோ? இங்ஙனே பாசுரக்கொலைகள் அளவு கடந்தவை.

ஆசார்ய ஹ்ருதயம் என்று ப்ரஸ்தாவித்து, இது அழகிய மணவாளப்பெருமாள் நாயஞர் அருளிச் செய்தது என்றெழுதி, உடனே ஸ்ரீவசநபூஷணத்தை ப்ரஸ்தாவித்து 'இதுவும் அவரேயருளிச் செய்தது' என்கிறூர், இத்தகைய மருள்கள் வாசாமகோசரம். இதையெல்லாம் விட்டிடுவோம். மணற்சோற்றில் கல் ஆராயுங்காரியம் நமக்கு வேண்டா. மஹாபாக்ய விஶேஷத்திஞல் ஸ்ரீவைஷ்ணவ குலத்திற் பிறந்துவைத்துத் தாம் எழுதத்தகாதவற்றை ஸஹவாஸ தோஷத்திஞலோ மருள்மிகுதியாலோ எழுதியிருப்பதற்கு நாம் மிக வருந்தி உலகத்திற்குத் தெளிவு பிறப்பிக்க விரும்பியே இந்தப் பரிசீலனையில் இறங்கிஞேமாதலால் அப்பணியை நிறைவேற்றி நிற்போமாக. இச்சுவடியில் முந்துறமுன்னம் முதலாழ்வார்களைப்பற்றிச் சிறிது எழுதிவிட்டு

''அரியும் அரனும் ஒன்று என்பதை இவர்கள்
பாக்களில் தெளிவாக வெளியிடுவதைக் காணலாம்''

என்கிறூர். இச்சுவடியில் இந்த வாக்கியம் ஒருமுறை இருமுறையல்ல; டன்முறையுமுள்ளது. *குறிப்பெனக்கடையுமாகில் கூடுமேல் தலையை யாங்கே அறுப்பதே கருமங்கண்டாய் *தலையறுப்புண்டுஞ்சாகேன் சத்தியங்காண்மினையா* என்று சபதமிட்ட தொண்டரடிப்பொடியாழ்வாருட்பட ஆழ்வார்களனைவருமே இக்கொள்கையைத் திடமாகக் கொண்டவர்களென்கிறூர். இதைவிட அற்புதம் கேளீர்;—

ஆழ்வாரையே மருண்டவரென்கிறூர்—''திருமாலையல்லது தெய்வமென்றேத்தேன்* என்றும், *முதலாய நல்லானருளல்லால் நாமநீர்வையகத்துப் பல்லாருளும் பழுது* என்றுமுள்ள பொய்கையாழ்வார் பாசுரங்களை யெடுத்துக் காட்டிப் பொருளையும் விவரித்துவிட்டு,

"இப்படிச் சொன்ன ஆழ்வார் அரியும் அரனும் ஒன்று என்கிறுர்" என்றெழுதுகிறுரிந்த வைணவர். *அரன் நாரணன் நாமம்* என்கிற பொய்கையார் பாசுரத்தைச் சிறிது விவரித்து

> "இவற்றுல் பொய்கையார் சைவவைணவக் காழ்ப்பின்றிச் சமரச மனப்பான்மை கொண்டவர் என உணர்கிறேும். அரியும் அரனும் அவருக்கு ஒன்றே." என்கிறுர்.

இப்படி யெழுதிவிட்டு, மேலே

"வைணவ சமயத்திற்கே வழிகாட்டியாக விடிவெள்ளியாக விளங்கிய பொய்கையார்" என்கிறுர். பேயாழ்வாரை ப்ரஸ்தாவித்து அவருடைய பாசுரமொன்றை [☼தாழ்சடையும் நீண்முடியும்☼ இத்யாதியை]யெடுத்துக்காட்டி "இவரும் சைவவைணவ சமரச மனப்பான்மையுடையவர்" என்றெழுதுகிறுர்.

ஆரியர்காள்! இவ்வைணவர் ஒருகால் நம்மிடம் நேரில்வந்து நமது திருவாய்மொழி திவ்யார்த்த தீபிகை முழுவதும் பெற்றுக்கொண்டுபோனதாக [அப்ரஸக்தமாய்]தாமே யெழுதியிருப்பதை முன்னமே காட்டியிருக்கிறேும். நம்மிடம்வந்த அப்போது இவர்தாம் கூறியதாவது—"தேவரீருடைய மூவாயிரதீபிகையுரையையும் ஏற்கனவே வாங்கியிருக்கிறேன், அநுபவித்திருக்கிறேன்; திருவாய்மொழியாயிரத்தின் தீபிகைமட்டும் இதுவரை கிடைக்கவில்லை' என்று. இந்தச் சிறு சுவடியில் இவர் எடுத்துக்காட்டும் திருவந்தாதிப் பாசுரங்களுக்கு என்ன பொருளென்பதை இவர் நம்முடைய தீபிகையுரையைக் கொண்டு அறிந்து தெளிந்தேயிருக்கவேணும். தெளியாமை ஏனோ அறியோம். உலகம் தெளிய இங்குநாமெடுத்துக காட்டுகிறேும்; இவரை மருளச் செய்த பாசுரங்களின் தீபிகையுரையைக் காட்டுதும் காண்மின்.

> அரன் நாரணன்நாமம் ஆன்விடை புள்ளூர்தி*
> உரைநூல் மறையுறையுங் கோயில்*—வரைநீர்
> கருமம் அழிப்பளிப்புக் கையதுவேல் நேமி
> உருவமெரி கார்மேனி யொன்று. (முதல் திருவந்தாதி பாட்டு–5.)

(பதவுரை.) நாமம்-ஒருவனுடைய பெயர், அரன்-எல்லாவற்றையும் அழிப்பதையே தொழிலாக வுடையவனென்று காட்டுகிற ஹரனென்பது. (மற்றெருரு மூர்த்தியின் திருநாமமோ வென்னில்), நாரணன்-ஸர்வவ்யாபகனென்றும் ஸர்வரக்ஷகனென்றும் காட்டுகிற) நாராயணனென்பது, ஊர்தி—ஒருவனுடைய வாஹனம், ஆன்விடை-(மூடத்தனத்துக்கு உதாரணமாகக் காட்டப்படுகிற) எருதாம், (மற்றெருரு மூர்த்தியின் வாஹனமோ வென்னில்), புள்-(வேதமூர்த்தியான) கருடப் பறவையாகும், உரை-ஒருவனைப்பற்றிச் சொல்லுகிற பிரமாணம், நூல்—மனிசரால் ஆக்கப்பட்ட ஆகமம், (மற்றெருரு மூர்த்தியைப்பற்றிச் சொல்லுகிற பிரமாணமோ வென்னில்), மறை-(ஸ்வயம் வ்யக்தமான) வேதமாகும், உறையும் கோயில்-ஒருவனுடையவாஸஸ்தானம், வரை-(கடினத்தன்மையுள்ள) கைலாஸ மலையாம், (மற்றெருரு மூர்த்தியின் இருப்பிடமோ வென்னில்), நீர்-(அவனுடைய நீர்மைக்குத் தகுதியான) திருப்பாற்கடலாம், கருமம்-ஒருவனுடைய தொழில்

அழிப்பு-(கல்நெஞ்சனென்று சொல்லும்படியான) ஸம்ஹாரத் தொழிலாம், (மற்றொரு மூர்த்தியின் காரியமோ வென்னில்). அளிப்பு-(இன்னருளுக்குரிய) ரக்ஷணத் தொழிலாம், கையது-ஒருவனுடைய கையிலுள்ள ஆயுதம்,. வேல்-(கொலைத் தொழிலுக்கு ஏற்ற) சூலாயுதம், (மற்றொரு மூர்த்தியின் ஆயுதமோ வென்னில்) நேமி-அருளார் திருச்சக்கரம், உருவம்-ஒருவனுடைய வடிவம், எரி-(கண்கொண்டு காண வொண்ணாதபடி) காலாக்நி போன்றதாம், (மற்றொரு மூர்த்தியின் திருமேனியோ வென்னில்), கார்-(கண்டபோதே தாபங்களெல்லாம் தீரும்படியான) காளமேகவுருவாம், ஒன்று-சிவனாகிய ஒருவன், மேனி-(ஸ்ரீமந் நாராயணனுக்கு சரீரபூதன். [ஸ்ரீமந் நாராயணமூர்த்தியோ அந்த சிவனுமுட்பட எல்லாவற்றையும் சரீரமாக வுடையவனென்பது ஸித்தம்.]

(விசேஷவுரை) [அரன் நாரணன் நாமம்.] கீழ்ப்பாட்டில் சிவனுடைய ஒரு செய்தியை எடுத்துப்பேசின ஆழ்வார் "அரன் அறிவானாம்" [சிவனுக்கு என்ன தெரியும்?] என்று இழித்துப் பேசவே அதனைக்கேட்ட சிலர் "நாடடங்கலும் ஈச்வரனென்று கொண்டாடப்படுகிற அச்சிவபெருமானை இப்படி நீர் ஏசிப் பேசலாமோ? அவனது காற்கீழே பலரும் தலையை மடுத்து ஏத்தியிறைஞ்சக் காண்கிறோமே, அவனும் பரதெய்வமன்றோ?" என்று சொல்ல, அது கேட்ட ஆழ்வார்—ஸ்ரீமந்நாராயணனே பரதேவதை யென்பதும் ருத்ரன் அங்ஙனல்லன் என்பதும் இருவருடையவும் நாமம் ரூபம் வாஹனம் தொழில் முதலியவற்றால் நன்கு விளங்கக் காணலாமென்று அவற்றையெடுத்துரைத்துக் காட்டுகிறாரிதில். இருவருடைய பெயரையும் நோக்குமிடத்து, சிவன் பெயர் அரனென்றும் விஷ்ணுவின் பெயர் நாராயணனென்றும் ப்ரஸித்தமாகவுள்ளன; அரனென்றால் ஹரிப்பவன்—எல்லாவற்றையும் ஒழிப்பவன் என்று பொருள்படும்; நாராயணனென்றால், நாரங்களாகிய நித்யவஸ்துக்களெல்லாவற்றிலும் உறைந்திருந்து அவற்றை நோக்குமவன் என்று பொருள்படும். ஆகவே, ஸர்வரக்ஷகன் பரதேவதையாயிருக்கத் தகுமோ! அன்றி ஸர்வபக்ஷகன் பரதேவதையாயிருக்கத் தகுமோ என்பதை நீங்களே ஆராயலாம் என்றாராயிற்று. இப்படியே இருவருடைய வாஹனங்களையும் நோக்குங்கால், 'அடா மாடே! என்று மூர்க்கரை நிந்திப்பதற்கு த்ருஷ்டாந்தமாகக் கொள்ளப்படுகிற எருதை வாஹனமாகவுடையவன் அரன்; * ஸுபர்ணோஸி கருத்மாந்* என்ற வேதவாக்கியத்தாலும், "வேதாத்மா விஹகேச்வர:" என்ற ஆளவந்தார் ஸ்ரீ ஸூக்தியாலும், "சிரஞ்சேதனன் விழிதேகம் சிறைபின் சினைபதம் கந், தரம் தோள்களுருவடிவம் பெயரெசுர்ச்சாமமுமாம்...அரங்கர்தமூர்திச் சுவணனுக்கே." என்ற ஐயங்கார் பாசுரத்தாலும் வேதஸ்வரூபியாகப் பிரதிபாதிக்கப்பட்ட பெரிய திருவடியென்னும் கருடாழ்வானை வாஹனமாகவுடையன் ஸ்ரீமந்நாராயணன். இனி இருவரையும்பற்றிச் சொல்லுகிற பிரமாணங்களை ஆராய்ந்தரல், வேதவிருத்தமான பொருள்களைச் சொல்லுமதாயும் ராஜஸதாமஸ புருஷர்களால் செய்யப்பட்டதாயுமுள்ள சைவாகமம் அரனைப்பற்றிச் சொல்லுவது; ஒருவராலும் செய்யப்படாமல் அநாதியாய் எவ்வகையான தோஷமுமற்று உண்மைப் பொருளையே உரைக்கின்ற வேதம் ஸ்ரீமந்நாராயணனைப் பிரதிபாதிக்கும் பிரமாணம். இனி

இருவருடைய இருப்பிடங்களையும் நோக்குங்கால், தனது நெஞ்சின் கடினத் தன்மைக்கு ஏற்றவாறு கடினமான கைலாசமலை அரனுக்கு உறைவிடம்; தனது திருவுள்ளத்தின் நீர்மைக்குத்தக்கபடி நீர்மையே வடிவான திருப்பாற்கடல் ஸ்ரீமந்நாராயணனுக்கு உறைவிடம். இதற்குத் தக்கபடி அழித்தல் தொழில் அரனது; காத்தல் தொழில் நாராயணனது. அதற்குத் தக்கபடி கொலைத் தொழிலுக்கு ஏற்ற முத்தலைச் சூலம் அரனது, 'அருளார் திருச்சக்கர மென்கிற புகழ்பெற்று உலகங்களையெல்லாம் பாதுகாக்குமாறுள்ள கக்கரப்படை நாராயணனது. இவையெல்லாம் ஒருபுறமிருக்கட்டும்; "ரூபமேவாஸ்ய ஏதந்மஹிமாநம் வ்யாசஷ்டே" [உருவமே வ்யக்தியின் பெருமையைத் தெரிவிக்கும்] என்ற வேத வாக்கியத்தின்படி இருவருடையவும் உருவத்தை நோக்குவோமாயின், கண்ணெடுத்துப் பார்க்க முடியாதபடி காலாக்நிபோலேயிருக்கும் அரனுருவம்; கண்டார் கண்குளிரும்படியான காளமேகம்போலே யிருக்கும் செல்வநாரணன் திருவுருவம் 'ஒன்று செந்தீ ஒன்று மா கடலுருவம்" என்றார் திருமங்கையாழ்வாரும் திருநெடுந்தாண்டகத்திலே. இப்படி ஒன்றுக்கொன்று மாறுபட்டுக் கிடக்கிற இரண்டு பொருள்களில் 'அங்காந்யந்யா தேவதா:" இத்யாதி உபநிஷத் வாக்கியங்களின்படி அரன் நாராயணனுக்கு அங்கமாயும் நாராயணன் அங்கியாயு மிருப்பர்கள். சரீரி தலைமையானதோ? சரீரம் தலைமையானதோ? ஆராய்ந்து சொல்லுங்கள் என்றவாறு. "மேனி ஒன்று" என்று அரனுடைய சரீரத் தன்மை சொன்னதுபோல நாராயணனுடைய சரீரித் தன்மை மூலத்தில் சொல்லப்படவில்லையாயினும், ஒன்று சரீர மென்றால் மற்றொன்று சரீரியென்பது தன்னடையே விளங்குமிறே. அந்தர்யாமிப்ராஹ்மணமென்னும் வேதப்பகுதியில் ஸ்ரீமந்நாராயணனே ஸர்வ சரீரியென்பது பன்னியுரைககப்பட்டுள்ளமை காண்க. "உருவமெரி கார்மேனியொன்று" என்பதை இரண்டு வாக்கியமாகக் கொள்ளுத லின்றியே ஏகவாக்கியமாகவே கொண்டு, இருவருடையவும் உருவத்தைப் பார்த்தால், ஒன்று எரிமேனி, மற்றொன்று கார் மேனி என்பதாக உரைத்தலும் ஒக்கும். (இவ்வளவும் நமது தீபிகையுரை). ... *

பொய்கையாழ்வாரது மற்றொரு பாசுரமுங் காட்டி இவ்வைணவர் மருள்கின்றார்; அப்பாசுரத்தையும் விவரித்துத் தெளிவு பெறுத்துவோம்.

ஏற்றான் புள்ளூர்ந்தா னெயிலெரித்தான் மார்விடந்தான்*
நீற்றான் நிழல்மணி வண்ணத்தான்*—கூற்றொருபால்
மங்கையான் பூமகளான் வார்சடையான் நீண்முடியான்*
கங்கையான் நீள்கழலான் காப்பு.

(பதவுரை) ஏற்றான்-ரிஷபத்தை வாஹநமாகவுடையவனும், எயில் எரித்தான்-த்ரிபுரஸம்ஹாரம் பண்ணினவனும், நீற்றான்-சாம்பலைப் பூசிக்கொண்டிருப்பவனும், கூறு ஒருபால் மங்கையான்-தனது உடம்பின் ஒரு பக்கத்திலே பார்வதியைத் தரித்துக்கொண்டிருப்பவனும், வார் சடையான்-நீண்ட ஜடையைத் தரித்துள்ளவனும், கங்கையான்-(அச்சடைமுடியில்) கங்கையைத் தாங்கிக்கொண்டிருப்பவனுமான ருத்ரன், புள் ஊர்ந்தான்-கருடனை வாஹநமாகவுடையவனும், மார்வு இடந்தான்-இரணியனது மார்வைப் பிளந்தொழித்தவனும், நிழல் மணி வண்ணத்தான்-நீல

ரத்நம்போலே குளிர்ந்த வடிவையுடையவனும், பூமகளான்—பெரிய பிராட்டியைத் திவ்ய மஹிஷியாக வுடையவனும், நீள் முடியான்-நீண்ட கிரீடத்தை அணிந்துள்ளவனும், நீள் கழலான்-நீண்ட திருவடிகளையுடையவனுமான ஸர்வேச்வரனுடைய, காப்பு – ரக்ஷணத்தில் அடங்கினனென்.

(விசேஷவுரை) [ஏற்றான் புள்ளூர்ந்தான்.] எல்லாப் பதார்த்தங்களையும் தரிப்பவன் ஸ்ரீமந்நாராயண னென்றார் கீழ்ப்பாட்டில்: ருத்ரனை அப்படிப்பட்டவனாகச் சிலர் சொல்லுகின்றார்களே! அஃது என்ன? என்று கேள்விபிறக்க, ஸ்ரீமந்நாராயணனுடைய பரத்வத்தையும் சிவனுடைய அவரத்வத்தையுஞ் சொல்லி, சிவனும் எம்பெருமானுடைய ஆளுகையிலே அடங்கினவனே [யென்கிறார். ஏற்றானும் எயிலெரித்தானும் நீற்றனும் கூற்றொருபால் மங்கையானும் வார்சடையானும் கங்கையானு மிருக்கிற ருத்ரன்—புள்ளூர்ந்தானும் மார்விடந்தானும் நிழல்மணி வண்ணத்தானும் பூமகளானும் நீண்முடியானும் நீள்கழலானு மிருக்கிற எம்பெருமானுடைய, காப்பு என்று அந்வயிப்பது. காப்பு—ரக்ஷ்யவர்க்கத்திற் சேர்ந்தவன் என்றபடி. சிவனுடைய விசேஷணங்களை வரிசையாக இட்டு, பிறகு எம்பெருமானுடைய விசேஷணங்களை வரிசையாக இட்டு, இன்னான் இன்னானுடைய காப்பு—என்று அடைவுபடச் சொல்லலாமாயிருக்க, அப்படிச்சொல்லாமல் விஷ்ணு ருத்ரர்களை மாறிமாறித் தொடுத்திருப்பது இருவர்க்குமுள்ள வாசி உடனுக்குடனே தெரியவேணுமென்பதற்காக. தமோகுணமே வடிவெடுத்ததாயும் மூடர்களுக்கு உவமையாக எடுக்கக்கூடியதாயு முள்ள ரிஷபத்தை வாஹநமாக வுடையவன் அவன்; வேதஸ்வரூபியான பெரிய திருவடியை வாஹநமாக வுடையவன் இவன்; தன்னை ஆச்ரயித்தவர்களின் குடியிருப்பான திரிபுரத்தைச் சுட்டெரித்தவன் அவன்; ஆச்ரிதனான ப்ரஹ்லாதனுக்கு விரோதியான இரணியனது மார்வைப்பிளந்தொழித்தவனிவன்; தான் ப்ராயச்சித்தியென்று தோற்றும்படி நீறுபூசின ஸர்வாங்கத்தையு முடையவன் அவன்; ச்ரமஹரமான நீலரத்நம்போலே குளிர்ந்த வடிவை யுடையவன் இவன். தன் உடலின் பாதிபாகத்தை ஸ்த்ரீரூபமாக ஆக்கிக்கொண்டவன் அவன்; உலகுக்கெல்லாம் ஈச்வரியான கமலச்செல்வியை திவ்யமஹிஷியாக வுடையவன் இவன்; தன்குறையைத் தீர்த்துக்கொள்ளும் வண்ணம் ஸாதநானுஷ்டாநம் பண்ணுவது எல்லார்க்குந் தெரியும்படி சடை புனைந்தவன் அவன்; ஸர்வேச்வரத்வ ஸூசகமான திருவபிஷேகத்தையுடையவன் இவன்; தான் பரிசுத்தனுவதற்குக் கங்கையைத் தரிப்பவன் அவன்; அந்த கங்கைக்கு உத்பத்தி ஸ்தாநமான திருவடியையுடையவன் இவன்-என்று சொல்லுமழகுகாண்மின்.

## அரியும் அரனும் ஒன்று என்கிற துஷ்ப்ரசாரத்தைப்பற்றி சுருக்கமாகவும் ஸாரமாகவும் கேண்மின்

நம்மாழ்வார் பெரிய திருவந்தாதியில்;—

முதலாந் திருவுருவம் மூன்றென்பர், ஒன்றே
முதலாகும் மூன்றுக்கு மென்பர்—முதல்வா!
நிகரிலகு காருருவா! நின்னகத்த தன்றே?
புகரிலகு தாமரையின் பூ.

என்றொரு பாசுரமருளிச் செய்துள்ளார். இதற்கு நம்முடைய திவ்யார்த்த தீபிகை வருமாறு;—

கீழ்ப்பாட்டில் பிரமனுடையவும் சிவனுடையவும் பேச்சு வந்தமையாலே பரத்வ விஷயமாகப் பிறர் சொல்லுகிற வாதங்கள் நினைவுக்கு வந்து, அவற்றைத் தள்ளி ஸித்தாந்தம் அருளிச் செய்கிறாரிதில். [முதலாந்திருவுருவம் மூன்றென்பர்] ப்ரஹ்மா, விஷ்ணு, சிவன் என்கிற மூன்று மூர்த்திகளும் துல்யமாகவே உலகுக்குத் தலைவர்கள் என்று கொள்ளுகிற சிலருடைய கொள்கையை இதனால் அநுவதித்தபடி. அரி அயன் அரன் என்கிற முப்மூர்த்திகளும் பரஸ்பரம் ஏற்றத்தாழ்வின்றியே ஸமாநராயிருப்பரென்று சிலர் சொல்லுவர்கள்-என்றவிதனால் அது ஸ்வஸித்தாந்தமல்ல, பரபக்ஷம் என்பது விளங்கும். [ஒன்றே முதலாகும் மூன்றுக்குமென்பர்] உத்தீர்ணவாதிகளென்று சிலருண்டு; அவர்களுடைய கொள்கை இது; ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரர்களிற்காட்டில் வேறுபட்ட நான்காவது தத்துவம் ஒன்றுண்டு; அதுவே இம்மூன்று தத்துவங்கட்கும் நிர்வாஹகமானது என்பராமவர்கள்; அவர்கள் துரீய ப்ரஹ்மவாதிகளெனப்படுவார்கள். அவர்களுடைய பக்ஷமும் ஸ்வஸித்தாந்தமல்லவென்று இதனால் காட்டப்பட்டது. ஸ்ரீமந்நாராயணனொருவனே பரதத்வமென்பது தோன்ற முதல்வா! என விளிக்கின்றார் காண்மின். ஸேவிக்கும் போதே ஸகலதாபங்களும் ஆறும்படியான திருமேனிகொண்ட தெய்வமே பரதத்துவம் என்பது விளங்க "நிகரிலகு காருருவா!" என்றும் விளிக்கின்றார். "ஒருருவம் பொன்னுருவம் ஒன்று செந்தீ ஒன்று மாகடலுருவம் ஒத்துநின்ற மூவுருவுங் கண்டபோது ஒன்று ஆஞ்சோதி முகிலுருவவெம்மடிகளுருவந்தானே" என்று திருமங்கையாழ்வாரும் திருநெடுந்தாண்டகத்தில் பரதத்துவ நிர்ணயம் பண்ணும் பாசுரத்தில் அருளிச் செய்தமை காண்க. ஸ்ரீமந்நாராயணனே பரதத்துவமென்பது நன்கு பொருந்துமாறு விஷயம் காட்டுகிறார் 'நின்னகத்தன்றே புகரிலது தாமரையின் பூ' என்பதனால். சிவன் பிரமனிடத்துக் தோன்றியவனென்றும்; அந்தப் பிரமன் உனது திருநாபிக் கமலத்தில் தோன்றியவனென்றும் சாஸ்த்ரங்களிற் சொல்லியிருக்கும்போது அந்தத் தாமரையைத் திருநாபியிலேயுடைய நீயேயன்றோ பரதத்துவமாகஇருக்கத் தகுதி யுண்டென்று காட்டியவாறு.

## இப்பாசுரத்தைத் தழுவிய பட்டர் ஸ்ரீஸூக்தி

இந்தப் பாசுரத்தையே பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவ—பூர்வசதகத்தில் பெரியவொரு ச்லோகமாகப் பன்னியுரைத்தார்; அதாவது—"த்ரயோ தேவாஸ்துல்யா:, த்ரிதயமிதமத்வைதம், அதிகம் த்ரிகாதஸ்மாத் தத்வம் பரமிதி விதர்க்காந் விகடயந்—விபோர் நாபீபத்மோ விதிசிவநிதாநம் பகவத: ததந்யத்ப்ரூபங்கீ பரவதிதி ஸித்தாந்தயதி ந:" என்பதாம். இந்த ச்லோகத்தின் பொருளையும் சிறிது விவரிப்போம். [த்ரயோ தேவாஸ் துல்யா:] அரி அயன் அரனென்னும் மூன்று தெய்வங்களுக்கும் ஸாம்யஞ்சொல்லுவர் சிலர், [த்ரிதயமிதம் அத்வைதம்.] இம்மூன்று தெய்வங்களும் வெவ்வேறல்ல; ஒன்றேயென்பர் சிலர். கீழே சொன்னது த்ரிமூர்த்தி ஸாம்யவாதம்; இது ஐக்யவாதம். வஸ்துக்களின் பேதத்தை ஒப்புக்கொண்டு அவற்றுக்கு ஏற்றத் தாழ்வுகளில்லாமை சொல்லுவது ஸாம்யவாதமெனப்படும்.

வஸ்துக்களுக்கு பேதத்தையே ஒப்புக்கொள்ளாமை ஐக்கியவாதமெனப்படும். இந்த ஐக்யவாதம் இப்பாட்டில் அநுவதிக்கப்படவில்லையாகிலும் அதனை நிரஸிப்பதும் ஆழ்வார்க்குத் திருவுள்ளமே யென்றுணர்ந்த பட்டர் அதனையும் எடுத்துக் கூறினரென்க. [அதிகம் த்ரிகாதஸ்மாத் தத்வம் பரம்.] இம்மூன்று தெய்வங்களிற் காட்டிலும் மேற்பட்டதான துரீயப்ரஹ்மமே பரதத்துவமென்று உத்தீர்ண வாதம் பண்ணுவர் சிலர். [இதி விதர்க்காந் விசடயந் விபோ: நாபீபத்ம: இத்யாதி.] இப்படிப்பட்ட சங்கைகளை யெல்லாம் அடியறுக்கின்ற திருநாபிக் கமலமானது ப்ரஹ்மருத்ரர்களுக்கும் முதற் கிழங்காயிருந்துகொண்டு 'உலகமெல்லாம் எம்பெருமானுடைய புருவ நெறிப்புக்குப் பரவசப்பட்டது' என்கிற ஸித்தாந்தத்தை நமக்கு நன்கு தெரிவிக்கின்றது—என்றாராயிற்று. ஆகையாலே இப்பாசுரத்தின் மொழி பெயர்ப்பாயிருக்கும் இந்த ச்லோகமென்று அநுஸந்திக்கக்கடவது. *

பேயாழ்வார் பாசுரமொன்றில் தோன்றிய மருளையும் மாய்ப்போம்.

தாழ்சடையும் நீண்முடியு மொண்மழுவும் சக்கரமும் *
சூழரவும் பொன்னாணும் தோன்றுமால்*—சூழும்
திரண்டருவி பாயும் திருமலைமே லெந்தைக்கு*
இரண்டுருவு மொன்றா யிசைந்து.

(விசேஷவுரை) எம்பெருமான் செய்தருளின பல அவதாரங்களில் சங்கரநாராயணாவதார மென்பது மொன்று; இது ஹரிஹராவதாரமென்றும் சொல்லப்படும். பாதிவடிவம் ஸ்ரீமந்நாராயணமூர்த்தியாகவும் பாதிவடிவம் பரமசிவமூர்த்தியாகவும் கொண்டதாமிது. எம்பெருமான் கொண்ட கோலங்களெல்லாம் பகவத்பக்தர்கட்கு உத்தேச்யமாகையாலே இவ்வுருவந்தன்னையும் ஆழ்வார்கள் அநுஸந்தித்துப் பாசுரங்கள் பேசுவதுண்டு. "திருமலைமே லெந்தைக்கு இரண்டுருவு மொன்றா யிசைந்து தோன்றும்" என்று இங்கு ஆழ்வா ரருளிச்செய்திருப்பதுகொண்டு இதற்குப் பலர் பொருள்கொள்வ தெங்ஙனேயென்னில்; திருவேங்கடமுடையானுக்குச் சடையுமுண்டு கிரீடமுமுண்டு; மழுவுமுண்டு, சக்கரமுமுண்டு; நாகாபரணமுமுண்டு; பொன்னாணுமுண்டு—என்றிங்ஙனே பொருள்கொள்வர். இது பொருந்தாது, திருவேங்கடமலையில் அர்ச்சையாக எழுந்தருளி யிருக்கு மெம்பெருமான் பக்கல் தாழ்சடையுமில்லை, ஒண்மழுவுமில்லை, சூழரவுமில்லை; நீண்முடியும் சக்கரமும் பொன்னாணுமேயுள்ளன. ஆகில் "திருமலைமேலெந்தைக்கு இரண்டுருவு மொன்றாயிசைந்து தோன்றும்" என்றது எங்ஙனே சேருமென்னில், நன்கு சேரும்; திருவேங்கடமுடையானை ஸேவை ஸாதிக்கும் திருமலையப்பன்றானே ஒரு ஸமயத்தில் இரண்டுருவையும் ஒன்றாயிசைத்துக்கொண்டு தோன்றினவன்-என்றபொருளே இதிலடங்கியுள்ளதாம். இதற்கு ஒன்றிரண்டு உதாரணங்களுங் காட்டுவோம்;— திருப்பள்ளியெழுச்சியில்—"மாமுனி வேள்வியைக்காத்து அவபிரதமாட்டிய அடுதிறலயோத்தி யெம்மரசே! அரங்கத்தம்மா! பள்ளி யெழுந்தருளாயே" என்கிறார். இதனால் திருவரங்கத்தில் சேஷசயனத்தில் பள்ளிகொண்டிருக்கும் அழகிய மணவாளன்றானே விச்வாமித்ர முனிவனுடன்சென்று வேள்வியைக் காத்துவந்தான் என்ற

தாகுமோ ? அந்த ஸ்ரீராமபிரானும் இந்த அழகிய மணவாளனும் ஏகதத்துவம் என்றபடியா மத்தனையன்றோ ? இன்னமும் பூதத்தாழ்வார் "அத்தியூரான் புள்ளை யூர்வான் அணிமணியின் துத்திசேர் நாகத்தின்மேல் துயில்வான்" என்றருளிச்செய்கிறார்; இதனால் கச்சி நகர்ப பேரருளாளப் பெருமாள் திருவனந்தாழ்வான்மீது பள்ளி கொண்டிருக்கிறார் என்றதாகுமோ? நாகத்தின்மேல் துயில்கொள்ளுமெம் பெருமானும் அத்தியூரானும் ஏகதத்துவம் என்றபடியாமத்தனையன்றோ. அப்படியே இங்கும். சங்கர நாராயணாவதார மெடுத்த பெருமானும் திருமலைமேலெந்தையும் ஏகதத்துவம் என்றதாகுமத்தனையன்றி வேறில்லை. ஹரிஹரரூபத்தால் காட்டியருளின சீலம் திருவேங்கடமுடையான் பக்கலில் பொலிகின்றது என்று அநுபவித்துச் சொன்னாரென்க. ஸுந்தரபாஹுஸ்தவத்தில் திருமாலிருஞ்சோலை யழகருடைய திவ்யாவயவங்களை அநுபவித்து ச்லோகமிட்டுப் பேசாநின்ற கூரத்தாழ்வான் "யசோதாங்குள்யக்ரோந்நமித சுபுகாக்ராண முதிதௌ கபோலாவத்யாபி ஹ்யநுபரததத்ஹர்ஷகமகௌ விராஜேதே..........ஸுந்தரஹரே:" [யசோதைப் பிராட்டி யானவள் தனது கைவிரல் நுனியால் கண்ணபிரானது மோவாய்க் கட்டையை நிமிர்த்து முத்தமிட்டாளே, அதனாலுண்டான ஹர்ஷம் இன்றைக்கும் இடையறாமல் இவ்வழகருடைய திருக்கபோலங்களிலே திகழாநின்றது] என்கிறார் இப்படிகளிலே பலபல ஸ்ரீஸூக்திகளுண்டு. அங்ஙனமே யிங்குங் கொள்க.

நம்மாழ்வார் திருவிருத்தத்தில் (96) *மதிவிகற்பால் பிணங்கும் சமயம் பல பலவாக்கி* என்றருளிச் செய்தபடி இந்நிலவுலகில் எத்தனையோ மதங்கள் நெடு நாளாகவே தோன்றி வேரூன்றியுள்ளன. இருளானது விளக்கேற்றினவாறே மறைந்து, பிரகாசம் விலகினவாறே மீண்டும் சூழ்வது போலவேதான் துர்மதங்களின் நிலையும். இதில் வியப்பொன்றுமில்லை. ஆனால் ஒருவியப்புள்ளது; எந்தமதங்களை ஆழ்வார்கள் கோடாலிகொண்டு கண்டித்தருளினரோ, அந்த துர்மதத்தை ஆழ்வார் ஸ்ரீஸூக்தியினால் தேறுவதாகக் காட்டுவதுண்டே அதுதான். நெற்றியில் நீறு பூசிக்கொண்டு எழுதவேண்டியதைத் திருமண்காப்பணிந்து கொண்டெழுதுவது மேம்பட்ட வியப்பு.

நிகமனம்—வேதாந்திகளின் அருமருந்தன்னகொள்கை. எம்பெருமானுக்கு அனந்தனென்று ஒரு திருநாமம். அந்தமில்லாதவன்—பரிச்சேதமில்லாதவன்; த்ரிவித பரிச்சேதரஹிதன் என்றபடி. தேசபரிச்சேதம் காலபரிச்சேதம் வஸ்துபரிச்சேதம் என்று மூவகைப்பட்ட பரிச்சேதங்களுமில்லாதவனென்கை. இவற்றில் வஸ்து பரிச்சேதராஹித்யமாவது—ஸர்வவஸ்து ஸாமாநாதிகரண்யார்ஹத்வம். எல்லாப் பொருளாயுமிருக்குந் தன்மையேயாமிது. இத்தன்மையை ஆழ்வார்கள் பல விடங்களிலும் அநுஸந்திக்கிறார்கள்.

திருவாய்மொழியில் (3-4) *புகழுநல்லொருவனென்கோ* என்னும்பதிகத்திற்கு மணவாளமாமுனிகளருளிய நூற்றந்தாதிப் பாசுரம் *புகழொன்றுமால் எப்பொருள்களுந்தானாய் நிகழ்கின்ற நேர்காட்டிநிற்க...* என்பதாம். *ஸர்வபூதாத்மகே தாத! ஜகந்நாதே ஜகந்மயே, பரமாத்மநி கோவிந்தே* என்று ப்ரஹ்லாதாழ்வான் இரணியனுக்குரைத்த தத்துவத்தை நம்மாழ்வார் ஸ்வாநுபவமுகத்தாலும் பரோபதேசமுகத்தாலும் காட்டியருளியுள்ளார். *புகழுநல்லொருவனில் *பூமியென்கோ

என்றாப்போலே ¤நளிர்மதிச் சடையனென்கோ¤ என்றும் கூறியுள்ளார். ¤கங்குலும்பகலில் ¤கடிகமழ்கொன்றைச் சடையனேயென்னும் நான்முகக் கடவுளேயென்னும்¤ என்று தாய்பாசுரமாகவுள்ளது. எம்பெருமானை ¤துழாயலங்கல் முடியாய்!¤ என்றழைப்பதுபோல ¤புனைகொன்றையஞ் செஞ்சடையாய்¤ என்றுமழைக்கிறார். ¤முனியே நான்முகனே! முக்கண்ணப்பா¤ அவாவறச் சூழரியை அயனையரனை¤ இவைபோலும் பாசுரங்கள் பலபல. இவற்றில் கலங்கிக் கொக்கரிப்பவர்கள் ஆசாரியர்களின் அடிபணியாத குருகுலவிமுகர்கள். ¤மன்னிய சீர் மாறன்கலையுணவாகப் பெற்றோமென்றிருக்குமாசார்ய ஸார்வபௌமர்களின் திருவருளுக்கிலக்கானவர்கள் கலங்க ப்ரஸக்தி லேசந்தானுண்டோ?

¤நளிர்மதிச் சடையனென்கோ!¤ என்ற ஓரிடத்தில் மட்டுமுள்ள வியாக்கியான ஸ்ரீஸூக்தியைக் காட்டினாற் போதுமே. ¤தெள்ளாரும் ஞானத்திருக்குருகைப்பிரான் பிள்ளான் எதிராசர்பேரருளாலருளிச்செய்த ஆறாயிரப்படி வியாக்கியானத்தில்—"ருத்ரனுக்கு ஐச்வர்யத்தைக் கொடுத்து அவனுக்கு ஆத்மபூதனானவனென்று சொல்லுவேனோ?" என்றுள்ளது; ஸாமாநாதிகரண்ய ஸ்தலங்களிலெல்லாம் நிர்வாஹ ஸரணி இதுவேயாகும். வேதத்திலும் ¤ஸ ப்ரஹ்மா ஸ சிவஸ் ஸேந்த்ரஸ் ஸோக்ஷர: பரமஸ்ஸ்வராட்¤ இத்யாதி பரச்சதஸ்தலங்களில் வேதாந்திகளின் நிர்வாஹம் இதுவேயாகும். அந்தர்யாமிப்ராஹ்மண மறியாதார்க்கு இவ்விஷயம் விஷமாகவே யிருக்கும்; ஒருகாலும் மூளையிலேறாது.

இத்தகைய நிர்வாஹத்தில் ப்ரதிபத்தியோடே "அரியும் கரியும் ஒன்று, அரியும் பரியும் ஒன்று, அரியும் நானும் ஒன்று, அரியும் நீயும் ஒன்று,......என்று எத்தனை சொல்லிலும் மறுப்பாரில்லை "கற்றினம் மேய்த்தான், காடுவாழ் சாதியானன், பற்றியுரலிடையாப்புண்டான், பொய்வல்லன், வஞ்சக்கள்வன்"......... இவையே ஆழ்வார்கள் வாய்வெருவுமவை; ¤கேட்பார் செவிசுடு கீழ்மை வசவுகளே வையும் சேட்பால் பழம்பகைவன் சிசுபாலன் பேச்சும் ஏச்சுமிவையேயாம். ... .

## விவாதச் சுவடியில் மற்றொரு விஷயம்

### (ஆழ்வார்களின் காலம்பற்றி)

இச்சுவடியில் முகப்பிலேயே 'ஆசிரியர் முன்னுரை' என்ற மகுடத்தின் கீழ்—"இந்நூலில், உபதேசரத்தினமாலையில் மணவாளமாமுனிகளால் அறுதியிட்டபடி ஆழ்வார்கள் வரிசைப்படுத்தப்பட்டுள்ளனர். *பொய்கையார் பூதத்தார் பேயார் புகழ்மழிசை.........நற்கலியன் ஈதிவர்தோற்றத் தடைவாமிங்கு" என்றெழுதிவிட்டு, அடுத்தபக்கத்தில்—"கி. பி, 7ஆம் நூற்றாண்டிலிருந்து ஒன்பதாம் நூற்றாண்டுமுடிய உள்ள இடைக்காலத்தில் ஆழ்வார்கள் வாழ்ந்தார்கள் எனக்கொள்வது உசிதமாகும்" என்று தலைநிறையப் பாகையணிந்த இந்த ஜட்ஜ் தீர்ப்புக் கூறுகின்றார். சுவடியின் முடிவில் "ஆழ்வார்களின் காலம்" என்று இரண்டு பக்கமிட்டு, டாக்டர். இராசமாணிக்கனார், சாமிசிதம்பரனார், பூர்ணலிங்கம் பிள்ளை, கலைக்களஞ்சியம், மு. இராகவய்யங்கார் ஆகிய இவ்வைவர் கருத்தைக் குறிப்பிட்டுள்ளார். *மாறன் பணித்த தமிழ்மறைக்கு ஆறங்கங்கூற

அவதரித்த திருமங்கையாழ்வாருடைய அவதாரம் முடிவுபெற்று ஒரு நூருண்டு முடிந்தபின்னர் நம்மாழ்வார் திருவவதரித்ததாகக் காட்டுகிருர். *மாறன் பணித்த தமிழ்மறைக்கு* என்ற உபதேசரத்தினமாலைப் பாசுரத்தையும் கையாளுகிருரந்தோ! இராசமாணிக்கனுர் முதலாக மு. ராகவையங்கார் முடிவாகவுள்ள நூதன ஆராய்ச்சியாளர்களின் காலநிலைக் கட்டுரைகளெல்லாம் நம்மால் அப்போதைக்கப்போது நீறுநீருகிப் பாறுபாருக்கப்பட்டொழிந்தன வென்பதை கூப கூர்மம் அறியாவிடினும் உலகமுழுதுமுணரும். நமது அந்த மறுப்பு நூல்களில் ஒன்றுகூட மறையவில்லை. உலகமெங்கும் பரந்து விளங்கிக்கொண்டிருக்கின்றன நிகழும் 1976 ஆண்டிலேயே மார்ச்சுமாதத்தில் வெளியிட்ட பங்குனி விசாக மலரில் [ஸ்ரீ ராமாநுஜன் 333ல்] சுருக்கமாக வெளியிட்டிருப்பதை முன்னம் இங்கு எடுத்துக்காட்டுகிறேன்.

## அடியேனுடைய எண்பத்தைந்து பிராயப் பூர்த்தியின் நினைவுமலரான எண்பத்தைந்து வார்த்தாமாலையிலிருந்து

ஆழ்வார்களின் கால ஆராய்ச்சி செய்கிற நவீனர்கள் கண்மூடிகளாய் மனம்போனபடியும் கைபோனபடியும் எழுதியுள்ளார்கள். "உழைக்கன்றே போல நோக்கமுடையவர் வலையுள்பட்டு* என்று திருமாலையில் தொண்டரடிப் பொடியாழ்வாரும்; *துவரித்த உடையவர்க்கும் தூய்மையில்லாச் சமணர்க்கும்* என்று பெரியதிருமொழியில் (5-6-8) திருமங்கையாழ்வாரும் கூறியிருக்கையாலே, உடையவர் என்று வழங்கப்படுகிற ஸ்ரீராமாநுஜருக்குப் பிறகே அவ்வாழ்வார்களிருவரும் அவதரித்தார்களென்பது கல்வெட்டு'' என்பது அவர்களது மருள் மொழிகளிலொன்று. பெரிய திருமொழியில் திருக்கடன்மல்லைப்பதிகத்தில் (2—6—9) *இணங்கு திருச்சக்கரத்தெம்பெருமானுர்க்கிடம்* என்றதில் (எம்பெருமானுர்க்கு) என்பதற்கு எம்பெருமானுக்கு என்றே பொருள். ஆர்விகுதி உயர்வு குறிப்பதாம். ஸம்பிரதாயத்தில் ஸ்ரீராமாநுஜர்க்கு எம்பெருமானுரென்று திருநாமம் ப்ரஸித்தமாகையாலே, நவீன ஆராய்ச்சிக்காரர்களிலொருவர் இது ஸ்ரீராமாநுஜரையே குறிப்பதாகக் கொண்டு,இப்பாசுரத்தை யெடுத்லுக்காட்டி"இதனுல் திருமங்கையாழ்வார் ஸ்ரீராமாநுஜர்க்கும் பிற்பட்டவரென்பது கல்வெட்டு'' என்றெழுதியுள்ளார். மிக மெச்சத்தக்க மேதை. ஸ்ரீகுலசேகராழ்வாரருளிச் செய்த பெருமாள் திருமொழியில் (2-2) *ஆடிப்பாடி யரங்கவோவென்றழைக்கும் தொண்டரடிப் பொடியாட நாம்பெறில்*என்றுள்ள பாசுரத்தை யெடுத்துக்காட்டி 'இத்தால் தொண்டரடிப்பொடியாழ்வார் குலசேகராழ்வார்க்கு முற்பட்டவரென்பது ஐயமின்றி அறியலாகிறது'' என்று ஒரு மஹாமேதாவி எழுதியுள்ளார். இதனோடு கூடவே யெழுதுகிருரவர்-'இப்பாசுரத்தில் தொண்டரடிப் பொடியென்பதற்குத் தொண்டர்களின் பாததூளியென்று பொருளானுலும் தொண்டரடிப்பொடியாழ்வாரை நினைப்பதும் நினைப்பூட்டுவதும் குலசேகராழ்வரர் கருத்திற் கொண்டதேயாகும்; இல்லையேல், மோனைக்குச்சேர (அன்பரடிப்பொடி)என்று இயற்றியிருப்பர்' என்று, இவர் மோனையின்பத்தை எவ்வளவுகண்டிருக்கின்ருரென்றறியோம். எதுகைக்கும் மோனைக்கும் சேர ஒருவர் திருக்குறளைத் திருத்தின கதையை நினைப்பது.

ஆழ்வார்களின் கால ஆராய்ச்சிக்காரர்களுக்கு நாம் முக்கியமாகத் தெரிவிப்பதொன்றே. திருவரங்கம் பெரியகோயிலில் சந்திரபுஷ்கரிணியின் கிழக்கே வாஸ...ப் பெருமாள் ஸன்னிதியில் ஆழ்வார்கள் பதின்மரும் வீற்றிருந்த திருக்கோலமாகத் திருப்ரதிஷ்டை செய்யப்பட்டிருக்கிறார்கள், பட்டர் ஸ்ரீரங்கராஜ ஸ்தவ பூர்வசதகத்தில் சந்திரபுஷ்கரிணிக்கு ச்லோகமிரண்டு இட்டருளினபிறகு *பூர்வேண தாம் தத்வத்¤என்று தொடங்கி¤பராங்குசாத்யா: ப்ரதமே புமாம்ஸோ நிஷேதிவாம்ஸோ தசமாம் தயேரந்¤ என்று பணித்துள்ளார் "வீற்றிருந்த திருக்கோலமாக எழுந்தருளியுள்ள நம்மாழ்வார் முதலான ஆழ்வார்கள் பதின்மரும் என்பால் அருள் செய்யவேணும்" என்பது இதன் கருத்து. பட்டரென்பவர் கூரத்தாழ்வானுடைய திருக்குமாரர். இவர்களின் காலமும் ஸ்ரீ ராமாநுஜரின் காலமும் ஒன்றே. ஸ்ரீராமாநுஜருடைய காலத்திற்கு முன்னமே ஆழ்வார்கள் பதின்மர்க்கும் மூலவிக்ரஹப்ரதிஷ்டை நிகழ்ந்திருக்கின்றதென்பது இதனால் நன்கு விளங்கிற்று. ஸ்ரீராமாநுஜர் காலம் இற்றைக்கு நாற்பது வருஷம் குறைய ஆயிரம் வருஷமாகிறது. ஆக. ஆயிரமாண்டுகட்கு முன்னமே ஆழ்வார்கள் பதின்மர்க்கும் (மூலவிக்ரஹ) ப்ரதிஷ்டை ஆகியுள்ளதென்று தேறிற்று. நவீன ஆராய்ச்சியாளர்கள் இதைக் கண்டிலர், உலகில் ஒருவர்க்கு விக்ரஹப்ரதிஷ்டை ஏற்படவேணுமானால் அவர் மறைந்தவுடனே ஏற்பட்டுவிடாது. மறைந்தபிறகு அவருடைய புகழ் மிகமிகப் பரவிப் பலபலவாண்டுகள் கடந்தபின்னரே விக்ரஹப்ரதிஷ்டை ஏற்படும். அதிலும் ஸ்ரீரங்கநாதனுடைய ஸன்னிதியில் ப்ரதிஷ்டை ஏற்பட்டதென்றால் இது ஸாமாந்யமாக—லகுவாக ஏற்படக்கூடியதன்று, இந்த ஒன்றுகொண்டே ஆழ்வார்களின் காலநிலையைப்பிராமாணிகர்கள் அறுதியிடலாம்.

ஆழ்வார்களின் பெருமையை நாம் நடுநிலையில் நின்று அறிந்துகொள்ள ஸ்ரீபாகவதமென்கிற க்ரந்தமொன்றே போதும். அது ஸ்ரீவைஷ்ணவர்கள் மட்டும் ஆதரிப்பதன்று. உலகிலுள்ள வைதிக மதத்தவர்கள் யாவரும் ஸ்ரீராமாயணம் போல் ஆதரித்து வருமது. அதில் பதினோராவதுஸ்கந்தத்தில்(5) *க்ருதாதிஷு நராராஜந்! கலௌ இச்சந்தி ஸம்பவம், கலௌ கலு பவிஷ்யந்தி நாராயணபராயணா:* என்று தொடங்கியுள்ள சுலோகங்களை நமது பூருவாசாரியர்கள் ரஹஸ்ய நூல்களில் எடுத்துக்காட்டியுள்ளார்கள். ஆசார்யஹ்ருதயத்தில் "க்வசித் க்வசித் தென்று இவராவிர்ப்பாவம் ¤கலியுங் கெடும்போலே ஸூசிதம்¤ என்றருளிச் செய்யப்பட்டுள்ளது. வேதாந்த தேசிகன் தமது குருபரம்பராஸாரமென்னும் ரஹஸ்யத்தில் சிறிது விரிவாகப் பணித்துள்ளார். எங்ஙனே யென்னில், "பீதகவாடைப்பிரானார் பிரமகுருவாகி வந்தென்றும் சொல்லுகிறபடியே அகஸ்த்யஸேவிதமான தேசத்திலே அநேக தேசிகாபதேசத்தாலே அவதரித்தருளினான். இத்தைக் கணிசித்து *கலௌ கலு பவிஷ்யந்தி நாராயண பராயணா:. க்வசித் க்வசிந் மஹாபாகா: த்ரமிடேஷு ச பூரிச:; தாம்ரபர்ணீ நதீ யத்ர க்ருதமாலா பயஸ்விநீ. காவேரீ ச மஹாபாகா ப்ரதீசீ ச மஹாநதீ* என்று மஹர்ஷியருளிச்செய்தான்" என்பது குருபரம்பராஸார (தேசிக) ஸூக்தி. மேலெடுத்துக்காட்டிய ச்லோகங்களில்—தாம்ரபர்ணி, க்ருதமாலா, பயஸ்விநி, காவேரி, ப்ரதீசீ—என்று ஐந்து நதிகள் காட்டப்பட்டுள்ளன.

நதிகள் நான்கில்லை. ஆறில்லை. இந்த ஐந்து நதிகளின் கரையிலேதான் ஆழ்வார்கள் திருவவதாரம் செய்தருளியுள்ளார்கள். தாம்ரபர்ணீதீரத்தில் நம்மாழ்வாரும் மதுரகவியாழ்வாரும். க்ருதமாலா என்பது தென்மதுரையில் பெருகுவது. இதன் கரையில் பெரியாழ்வாரும் ஆண்டாளும், பயஸ்விநியென்பது பாலாறு. இவ் வாற்றின் கரையில்-பொய்கையார் பூதத்தார் பேயார் திருமழிசைப்பிரான் ஆகிய நால்வர். காவேரியின் தீரத்தில்-தொண்டரடிப்பொடியாழ்வார், திருப்பாணாழ்வார், திருமங்கையாழ்வார் இம்மூவர் தோன்றினர். ப்ரதீசீ என்பது மேலாறு; அது மலை நாட்டிலே பெருகுவது. [அதில் அடியேன் நீராடியிருக்கிறேன்.] அதன் கரையில் குலசேகராழ்வார் திருவவதரித்தருளினர். நதியும் மிச்சப்படவில்லை. ஆழ்வார் களும் மிச்சப்படவில்லை. ஒரு விசேஷம் குறிக்கொள்ளவேணும். கங்கை, யமுனை, ஸரஸ்வதி, ஸரயு, க்ருஷ்ணை, துங்கபத்ரை முதலிய புண்ய நதிகளுமிருக்கின்றன அந்தநதிகளின் கரையிலும் சிலசில பக்தர்கள் தோன்றியிருக்கலாம். ஆனால் அந்த நதிகளை ப்ரஸ்தாவிக்கவில்லை. 'கலௌ—க்வசித்க்வசித் பவிஷ்யந்தி' என்று சொன்ன தோடு நில்லாமல், தமிழ்நாட்டில் அதிகமாக அவதரிக்கப்போகிறார்கள். [த்ரமிடேஷு ச பூரிஶ:*] என்று சொல்லியிருப்பது ஒன்று; ஆழ்வார்களில் நம்மாழ் வார்க்கு ப்ரபந்த ஜநகூடஸ்தரென்கிற ப்ராதாந்யம் தோன்றப்போகிறதென்ப தறிந்து தாம்ரபர்ணீ நதியை முந்துறமுன்னம் கூறியிருப்பது மற்றொன்று,

ஆக இவ்வளவோடு நாம் இவ்விஷயத்தை இப்போது நிறுத்திக்கொள்ளலாம். கி. பி. ஏழாவது நூற்றாண்டுக்கு நெடுநாளைக்கு முன்னரே ஆழ்வார்கள் பதின்மர்க் கும் விக்ரஹப்ரதிஷ்டை நடந்திருக்கின்றதென்பதை ப்ரபலப்ரமாணபூர்வக மாகக் காட்டியானபின்பு பிறருடைய இருளும் மருளும் மலிந்த பேச்சுக்களை நாம் பொருள்படுத்தியெழுதுவது பயனற்றபணியன்றோ. ஆயினும் இன்னும் சில நிரூப ணங்கள் செய்து நிற்போம்.

## — மயிலை மாதவதாஸருடைய மேன்மை —

நாலாயிர திவ்யப்பிரந்தமச்சிட்டவர்களில் மயிலை மாதவதாஸரென்பவ ரும் பரிகணிதராவர். இவர் தமது இரண்டு பதிப்புகளில் பிராமாணிகர்களுக்கு அபிமதமான ஆழ்வார்களின் காலக்குறிப்பை விரிவாகக் கண்ணாடிபோல் காட்டி விட்டு, டாக்டர். N. கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார், பி.டி. ஸ்ரீநிவாஸய்யங்கார் பி.ஏ., கோபிநாதராவ், மு, ராகவையங்கார் முதலிய நவீன ஆராய்ச்சியாளர்கள் ஆழ் வார்களின் காலம் கி. பி. ஐந்தாம் நூற்றாண்டிலிருந்து பத்தாம் நூற்றாண்டுக்குட் பட்ட ஐந்நூறு வருடங்கள் என்கின்றனர். ஸம்ப்ரதாய ஞானமும் சரித்ரஞானமும் ஒருங்கே வாய்க்கப்பெற்ற ஸ்ரீவைஷ்ணவப் பேரறிஞர்களுடைய ஆராய்ச்சி முறை யில் முக்கிய விஷயமாக இஃதுள்ளது'' என்று ஸாத்விக முறையில் எழுதியுள்ளார்.

இராமநாதபுரத்தில், ரா—ராகவையங்காரென்றும், மு. ராகவையங்கா ரென்றும் ராகவையங்கார்களிருவர் வாழ்ந்தனர். இவர்களில் ரா—ராகவையங்கா ரென்பவர் ஸதாசார்ய ஸன்னிதியில் பகவத்விஷய-ரஹஸ்யாதி க்ரந்த காலக்ஷேபஞ் செய்து ஆழ்வாராசாரியர்களின் திருவடிகளில் ப்ராவண்யமே வடிவெடுத்திருந்த வர். மு. ராகவையங்காரென்பவர் இதற்கு மாறாக இருந்தவர். அவர் திவ்யப்ர

பந்தப் பாசுரப் பாடங்களைப் பூர்வாசார்ய வியாக்கியான விருத்தமாகத் திருத்தி "அருளிச்செயற்பாடவமைதி" என்றொரு கட்டுரையையெழுதி மதுரைச் செந்தமிழ்ப் பத்திரிகையில் வெளியிடுவித்தார். அது, வெளிவந்த மறுநாளே செந்தமிழாராய்ச்சி என்னும் நமது விரிவான நூலினால் முற்றமுடிய மறுக்கப்பட்டொழிந்தது. ஆழ்வார்களின் காலநிலையைப்பற்றி அவர் எழுதியிருந்ததும் நம்மால் மறுக்கப்பட்டு மடிந்தது. நம்முடைய மறுப்பு நூல்கள் யாவும் அந்த மு. ராகவையங்காருடைய ஜீவிதகாலத்திலேயே வெளிவந்தன. வெளிவந்தபின் 10, 12 வருடங்கள் அவர் ஜீவித்திருந்து நம்மோடு நட்புங் கொண்டனர்.

நம்முடைய மறுப்பு நூல்களில் ஒன்றுக்கும் மறுப்புரைக்கவோ எழுதவோ அப்பெரியார் நெஞ்சாலும் நினைத்ததில்லை. அவ்வளவேயன்று; திருவனந்தபுரத்திலும் இராமநாதபுரத்திலும் காஞ்சீபுரத்திலும் நம்மை அவர் சந்திக்க நேர்ந்த காலங்களில் நமது ஸமாதானங்களினால் தாம் பரம த்ருப்தியடைந்ததாகவும் கூறினர். [இவ்விஷயம் இப்போதாக எழுதப்படுவதன்று; பல சந்தர்ப்பங்களில் பலகால் எழுதப்பட்டுள்ளதைச் சென்னையில் வாழும் தொண்ணூறு பிராயத்தவரான ஸ்ரீமதுபயவே. ராவ்ஸாஹிப். S. ராகவையங்கார் ஸ்வாமி நன்கறிவர்.]

## — கல்வெட்டுகளைப்பற்றி —

இவர்கள் காட்டும் கல்வெட்டெல்லாம் இவர்களது இருள் துயக்கு மயக்கு மருள்களுக்கிட்ட கல்வெட்டேயென்று பிராமாணிகர்கள் திடமான நம்பிக்கை கொள்ளலாம்.

> 'முதல் ஆதித்தசோழன் காலத்துக் கல்வெட்டென்று கருதப்படும் திருக்கண்ணபுரம் கல்வெட்டொன்றில் ஒருவன் பெயர் சடகோபனென்று காணப்படுகின்றது. அக்கல்வெட்டின் காலம் கி. பி 908என்னலாம். நம்மாழ்வாருக்கு முன்னர் இப்பெயரைக் கொண்டவர் வேறு எவரும் இல்லை......"

என்றெழுதியுள்ளார் இராசமாணிக்கனார் (பக்கம் 46ல்). சடகோபரென்னுந் திருநாமம் நம்மாழ்வாருக்கு அஸாதாரணமென்கிற வுணர்ச்சி இவர்க்கும் இவரைச் சார்ந்தவர்கட்கும் யதார்த்தமாக இருக்குமாகில் இக்காலவாராய்ச்சியில் இவர்கள் கைவைக்க ப்ரஸக்தியேயிராது. விஷ்ணுவாலயங்களில் பாஞ்சராத்ரம் வைகாநஸம் என்று இருவகுப்பாகவுள்ள கோவில்களெல்லாவற்றிலும் எம்பெருமானுடைய திருவடிநிலைக்கு ஸ்ரீ சடகோப னென்றே வியபதேசம் எங்குமுள்ளது. இஃது என்றைக்குத் தொடக்கமாயிற்றென்று இவ்வாராய்ச்சியைச் செய்து முடிவுகண்டபின் பன்றோ ஆழ்வார்காலத்தினாராய்ச்சியில் இவர்கள் இறங்கவேணும், "நம்மாழ்வார் அவதரித்து சடகோபனென்று திருநாமம் வஹிப்பதற்கு முன்னமே சடகோபநாம ப்ரஸித்தியிருந்தது" என்று எழுத இவர்களுக்குக் கைவரவில்லை. "நம்மாழ்வார்க்கு முன்னர் இப்பெயரைக் கொண்டவர் வேறு யாருமில்லை" என்று ஐயந்திரிபற இவர்கள் கையினால் எழுதுவித்தது தெய்வமன்றோ.

அர்ச்சாவதாரம் எப்போது ஏற்பட்டது? அர்ச்சாவதார பகவான்களின் திருவடி நிலைக்கு ஸ்ரீ சடகோபன் (அல்லது) ஸ்ரீ சடாரி யென்கிற வியபதேசம் என்றைக்கு ஏற்பட்டது? என்று விமர்சித்து நிர்ணயிக்கவேண்டுவது மிகமுக்கியம்.

ஸ்ரீமத் வேதாந்ததேசிகன் பணித்த பாதுகாஸஹஸ்ரத்தில் *த்ரமிடோபநிஷந்நிவேஶ ஶூந்யாநபி லக்ஷ்மீரமணுய ரோசயிஷ்யந், த்ருவமாவிஶதிஸ்ம பாதுகாத்மா* என்கிற சுலோகத்தை யநுபவிக்கப் பிறந்தவர்களல்லரே இவர்கள்.

இந்த விசாரங்களினிடையே ஒரு முக்கியமான விசாரம் அவசியமானது. ஸ்ரீ ராமாயணத்தில் சித்திரகூடத்தில் பரதாழ்வானோடுகூட வந்தவர்களில் ஒருவரான ஜாபாலி முனிவர் நாஸ்திகவாதத்தைச் செய்ய, அதற்குக் கண்டன முரைக்கின்ற சக்ரவர்த்தி திருமகனார் "யதாஹி சோரஸ் ஸ ததாஹி: புத்த:" என்று புத்தனையெடுத்துக் காட்டியிருப்பதை அறியாதாரில்லை. புத்தனுடைய காலத்தை எவ்விதமாக நிர்ணயித்திருக்கிறீர்கள். இற்றைக்கு இரண்டாயிரத்துச் சொச்சம் வருடங்களுக்கு முன்பென்று தானே நிர்ணயித்திருக்கிறீர்கள். அந்த புத்தனை யுதாஹரித்த ஸ்ரீராமபிரானுடைய காலம் கி. பி. வருடங்களுக்குச் சற்றுமுன்னரோ மிகவும் பின்னரோ இருக்கவேண்டும். ஸ்ரீராமாயணம் அவதரித்த காலம் கி. பி. எத்தனையாவது நூற்றாண்டாக இருக்கலாமென்பதையும் இவ்வாராய்ச்சியாளர்கள் ஆராய்ந்து முடிவு செய்க. வடமொழி வேதத்தில் நூற்றுக்கணக்கான கதைகள் நடந்தனவாக ஓதப்பட்டுள்ளது; அவற்றைப் பலகால் விவரித்திருக்கிறோம்.

யதார்த்தவாதியான வேதம் அக்கதைகள் நடவாமலிருந்தால் கூறமாட்டாது. ஒவ்வொருகதையாக எடுத்துக்கொண்டு 'இக்கதை எப்போது நடந்தது? இக்கதை எப்போது நடந்தது?' என்று ஆராய்ந்து அவ்வவற்றுக்குக் காலம் கண்டுபிடிக்க முயலவேணும். எம்மால் கண்டுபிடிக்க முடியவில்லை என்பவர்கள் தமிழ் வேதத்தில் கூறப்படும் அரசர்களது கதைகளின் காலமும் கண்டுபிடிக்க முடியாததென்று கையொழிந்து நிற்கவேணும், இதைக் கண்டுபிடிக்க ஸாதனமிருக்கிறதே யென்னில், வஞ்சகமான ஸாதனங்களைக்கண்டு மருளவேண்டாவென்று பல்காலுங் கூறியுள்ளோம்.

இருள் துயக்கு மயக்கு மறப்பென்கிறவற்றுக்கெல்லாம் கொள்கலமாகிய நம்போலியர் தகர்க்குமளவிலே நிற்பதன்று உண்மைப் பொருள். ஆயினும் இவர்கள் சித்தாந்தம் செய்கிறபடியே ஆழ்வார்கள் மிகவும் பிற்காலத்தவர்களென்றே வைத்துக் கொள்வோம். கி. பி. ஆறாவது நூற்றாண்டிலிருந்தவர் நம்மாழ்வார் என்கிறார்கள். பதினாறாவது நூற்றாண்டிலென்றும் வைத்துக்கொள்வோம். நிகழும் நூற்றாண்டில் என்றும் வைத்துக்கொள்வோம். அருமருந்தன்ன திவ்வியப் பிரபந்தங்கள் 'தொண்டர்க்கு அமுதுண்ணச் சொன்மாலைகள் சொன்னேன்" என்றபடி அநுபவ ரஸிகர்களுக்குத் தேனும் பாலும் நெய்யும் கன்னலுமமுதுமாக அமைந்திருக்கின்றமை அபலபிக்க முடியாத விஷயம். பதினாயிர மாண்டுகட்கு முற்பட்டவை யென்று வேறு சில நூற்கள் கிடைத்தாலும் அவற்றை ஒரு பொருளாக மதிப்பாரில்லை. திருவாய்மொழியின் ஈற்றுப் பாசுரத்தின் வியாக்கியானத்திலே (ஈடுமுப்பத்தாறாயிரப்படியில்) நம்பிள்ளை அருளியுள்ள ஒருஅற்புதமான ஸ்ரீஸூக்தி காணுமின்:

"ஆழ்வார்க்குப் பின்பு நூறாயிரம் கவிகள் போருமுண்டாய்த்து. அவர்கள் கவிகளோடு கடலோசையோடுவாசியற்று அவற்றைவிட்டு இவற்றைப்பற்றித் துவளுகைக்கடி இவருடைய பக்தியபிநிவேசம் வழிந்து புறப்பட்ட சொல்லாகையிறே."

என்கிற இந்தஸ்ரீஸூக்திகள் விலையுயர்ந்தவை. இவ்வளவோடு நிற்போமிப்போது.

P. B. A.

திவ்யப்ரபந்தங்களை அருளிச்செய்தவரான திருமங்கையாழ்வார் திருவடிகளில் ப்ராவண்யமுடைமையை இப்பாட்டில் பேசினாராயிற்று. திருமங்கையாழ்வாருடைய திருவவதார ஸ்தலம்—**திருக்குறையலூர்** எனப்படும். "மண்ணியில் நீர்தேங்குங் குறையலூர் சீர்க்கலியன் தோன்றியவூர்" என்பது உபதேசரத்தினமாலை. "குறையல் பிரானடிக்கீழ் விள்ளாதவன்பன்" என்ற விசேஷணம் வீறுபெறும்படி, திருவாலி திருநகரியி லெழுந்தருளியிருக்கிற திருமங்கை மன்னனுடைய பாதாரவிந்த பீடத்தின்கீழ் எம்பெருமானாருடைய திருக்கோலம் ஏறியருளப் பண்ணப்பட்டிருக்கின்றமை உணரத்தக்கது.

**சீலம்**—மஹானாயிருப்பவன் மந்தமதிகளோடு புரையறக் கலந்து பரிமாறுங் குணம் சீலகுணமெனப்படும். எம்பெருமானார் மஹாநுபாவரா யிருந்துவைத்தும், தம்மை வெகு நீசராக நினைத்திருக்கிற இவ்வமுதனார் தம்மோடே கலந்து பரிமாறப்பெற்ற மஹாகுணத்திற்குத் தோற்றுச் சொல்லுகிற சொல் இது. **உள்ளுதல்**—சிந்தித்தல். '**பேரியல்வு**' என்பதில் ஆறும் வேற்றுமைத் தொக்கியிருப்பதாகவுங் கொள்ளலாம், முதல் வேற்றுமையாகவும் கொள்ளலாம். "இது எனக்கு ஸித்தித்த பெரிய விரகு" என்னவுமாம். **ஒன்று** என்பது காகாக்ஷிந்யாயத்தாலே கீழும்மேலும் அந்வயிக்கும். மிக்க சீலமல்லால் **ஒன்று** உள்ளாது ; எனக்குற்ற பேரியல்வு **ஒன்றறியேன்**—என்று. ... ... ... ... ... *

**பேரியல்நெஞ்சே அடிபணிந்தே னுன்னை* பேய்ப்பிறவிப்**
**பூரியரோடுள்ள சுற்றம் புலர்த்தி* பொருவருஞ்சீர்**
**ஆரியன் செம்மை யிராமாநுசமுனிக் கன்புசெய்யும்**
**சீரியபேறுடையார்* அடிக்கீ ழென்னைச் சேர்த்ததற்கே.** 3

| | | | |
|---|---|---|---|
| பேர் இயல் நெஞ்சே! | மிகவும் கம்பீரமான மனமே; | செம்மை | (ஆச்ரிதரோடு) ருஜுவாகப் பரிமாறுந்தன்மை வாய்ந்தவருமான |
| உன்னை அடி பணிந்தேன் | உன்னை வணங்குகின்றேன்; (எதற்காக என்னில்;) | இராமாநுச முனிக்கு | எம்பெருமானார் திறத்தில் |
| பேய் பிறவி | ஆஸுரப் பிறப்பையுடையவர்களான | அன்பு செய்யும் சீரிய பேறு உடையார் | பக்தி பண்ணுவதையே பரம புருஷார்த்தமாக வுடையவர்களான கூரத்தாழ்வான்போல்வாருடைய |
| பூரியரோடு உள்ள | நீசர்களோடு (எனக்கு) இருந்த | அடிக்கீழ் | திருவடிகளின் கீழே |
| சுற்றம் | உறவை | என்னை | (பரம நீசனாயிருந்த) என்னை |
| புலர்த்தி | போக்கடித்து | சேர்த்ததற்கே | கொண்டு சேர்த்த மஹோபகாரத்திற்காகவே (உன்னை அடிபணிந்தேன்.) |
| பொருவு அரு சீர் | ஒப்பற்ற குணங்களை யுடையவரும் | | |
| ஆரியன் | சிறந்த அநுஷ்டாந முடையவரும் | | |

***—"**மந ஏவ மநுஷ்யாணாம் காரணம் பந்தமோக்ஷயோ:**" என்றபடி நன்மை தீமைகட்கு முதற்காரணம் நெஞ்சேயாதலால், "நெஞ்சே! சொல்லுவோ மவன்நாமங்களே" என்ற பாரிப்புக்கு அந்தநெஞ்சு உடன்பட்டுத் தமது கொள்கைக் கிணங்க ஒழுகப்பெற்ற ஸந்தோஷத்தினால் அந்தத் தமது நெஞ்சை நமஸ்கரிப்பதாகக் கூறுகின்றார் இதில். இங்ஙனே நெஞ்சைத் தம்மில் வேறுபடுத்திக் கூறுதல் கவிமரபில் வந்த ஒருவகைச் சமத்காரம். ஆஸுர ப்ரக்ருதிகளான நீசர்களோடு எனக்கிருந்த ஸம்ஸர்க்கத்தைப் போக்கடித்து, ஒப்பற்ற குணசாலியான எம்பெருமானாருடைய திருவடிகளில் ப்ராவண்யமாகிற பரம புருஷார்த்தத்தைப் பெற்றுள்ள ஆழ்வான் போல்வாருடைய திருவடிகளின் கீழே என்னைக் கொண்டு சேர்த்த நெஞ்சே! இப்பெருநன்றிபுரிந்த உனக்கு நான் என்ன கைம்மாறு செய்யப்போகிறேன்? "தலை

யல்லால் கைம்மாறிலேனே'' என்றாற்போல உன்னைத் தலையால் வணங்குவது தவிர வேறொரு கைம்மாறு நான் செய்யகில்லேன் என்றாராயிற்று. **பூரியர்—இழி** பிறப்பாளர். **புலர்த்துதல்—**உலரச்செய்தல்; அதாவது போக்கடித்தல். **பொருவு—**ஒப்பு. **ஆரியன்** [கர்த்தவ்யமாசரந் காமம் அகர்த்யவ்யமநாசரந்—திஷ்டதி ப்ரக்ருதாசாரே ஸது ஆர்யஇதி ஸம்ருத:] **செம்மையிராமாநுசமுனி—**செம்மைக்குணமுடைய இராமாநுசமுனி என்றபடி: செம்மைக் குணமாவது வடமொழியில் 'ஆர்ஜவம்' எனப்படும். அதாகிறது—ருஜுவாயிருக்குந்தன்மை; இதற்கு ப்ரதிகோடியான குணம்—கௌடில்யம் எனப்படும். ஒருவன் ஒருவனை நோக்கி 'அப்பா! நீ எவ்வூர்?' என்றால் 'நான் தற்காலமிருப்பது இவ்வூர்' என்று விடையளிப்பதும், 'உன் பெயர் என்ன?' என்றால், 'என் பெயர் உண்டுவளர்ந்தான்' என்று விடையளிப்பதும் இவ்வாறாகக் கேட்பதற்கெல்லாம் கோணலாகவே விடையளிப்பது கௌடில்ய குணத்தின் காரியமாகும். உள்ளதை உள்ளபடியே சொல்லுகையும் செய்கையும் செம்மைக் குணத்தின் காரியமாகும். சக்ரவர்த்தி திருமகனார் பஞ்சவடியில் எழுந்தருளியிருந்தபோது சூர்ப்பணகைவந்து, [ஆகதஸ்த்வமிமம் தேசம் கதம் ராக்ஷஸஸேவிதம்—கிமாகமநக்ருத்யம் தே தத்வமாக்க்யாதுமர்ஹஸி.] ராக்ஷஸர்கள் வந்தடைந்திருக்கிற இவ்விடத்திற்கு நீர் எவ்வாறு வந்தீர்? வந்த காரியமென்ன? என்று கேட்க, அதற்குப் பெருமாள் கோணலான உத்தரம் கூறலாமாயினும் அங்ஙன் கூறாது ''**ஆஸீத் தசரதோ நாம ராஜா**'' என்று தொடங்கி நேரான உத்தரம் கூறினர். அவ்விடத்திலே வால்மீகி முனிவன் [ருஜுபுத்திதயா ஸர்வம் ஆக்க்யாதுமுபசக்ரமே] என்கிறான். இதுவாய்த்து ஆர்ஜவகுணம்.

''இராமாநுசனடிக் கன்புசெய்யுஞ் சீரிய பேறுடையார்'' என்றவிடத்து ஸ்ரீராமாநுஜ பக்தர்களெல்லாரையும் விவக்ஷிக்கிறார் என்றலும், கூரத்தாழ்வானை விசேஷித்துக் கருதுகின்றாரென்றலும் ஒக்கும். ... ... . 3

**என்னைப்புவியி லொருபொரு ளாக்கி* மருள்சுரந்த**
**முன்னைப்பழவினை வேரறுத்து* ஊழி முதல்வனையே**
**பன்னப்பணித்த விராமாநுசன் பரன் பாதமுமென்**
**சென்னித்தரிக்க வைத்தான்* எனக்கேதுஞ் சிதைவில்லையே.** 4

| | | | |
|---|---|---|---|
| ஊழி முதல்வனையே | காலம்முதலிய ஸகலபதார்த்தங்களுக்கும் காரணபூதனை எம்பெருமானையே | மருள் சுரந்த முன்னை பழவினை வேர் அறுத்து | அஜ்ஞான மூலகங்களாய் மிகவும் அநாதிகளான (எனது) பாவங்களை வேரற நீக்கி |
| பன்ன | (எல்லாரும் விவேகித்து அநுஸந்திக்கும்படி | பாதமும் | தமது திருவடிகளையும் |
| பணித்த | (ஸ்ரீபாஷ்யமுகத்தாலே) அருளிச்செய்த | என் சென்னி | எனது தலையிலே |
| பரன் இராமாநுசன் | ஸர்வோத்க்ருஷ்டரான எம்பெருமானார் | தரிக்க வைத்தான் | (நான் உகந்து தரிக்கும்படியாக வைத்தருளினார்; இவ்வளவு மஹாப்ரஸாதம் பெற்றேனென பின்பு) |
| புவியில் | இந்தப்பூமியிலே | | |
| என்னை ஒரு பொருள் ஆக்கி | (அபதார்த்தமாய்க் கிடந்த) என்னை ஒரு பதார்த்தமாக்கி | எனக்கு | அடியேனுக்கு |
| | | ஏதும் சிதைவு இல்லை | எவ்விதமான ஹாநியும் இனி உண்டாக வழியில்லை |

***—எம்பெருமானாருடைய நிர்ஹேதுக விஷயீகாரத்திற்கு ஆளான நான் இனி ஒருநாளும் எவ்விதமான ஹாநியையும் அடையமாட்டேன் என்கிறார்,—பதார்த்தகோடியில் சேராமல் துச்சனாயிருந்த எனது கருமங்களையெல்லாம் வேரற நீக்கி, தமது பாதாரவிந்தங்களையும் என் தலைமேலே வைத்தருளினார் எம்பெருமானார்; இப்பேறுபெற்ற எனக்கு இனி ஒரு குறையுமில்லை என்றாராயிற்று.

**மருள் சுரந்த**—அஜ்ஞாநத்தாலே செய்யப்பட்ட என்கை; மருளாலே சுரக்கப் பட்ட என்றவாறு. [**ஊழிமுதல்வனையே பன்னப்பணித்த**] ஊழிமுதல்வனை எம்பெருமானையே பரவும்படி அமுதனாரகிய தம்மைச் செய்தருளின—என்று அர்த்தமல்ல; பகவத்விமுகரா யிருந்தவர்களையெல்லாம் உபதேசாதி முகத்தாலே பகவத்ப்ரவணராம்படி செய்தருளினவர் என்று பொதுப்படையாகச் சொன்னபடி. **ஊழிமுதல்வன்** பிரளயகாலத்தில் முழுமுதற் கடவுளாயிருந்தவன் என்றுமாம்.

**பரன்** என்றதை இராமாநுசனுக்கு விசேஷண மாக்காமல் நிர்வஹிப்பதும் ஒருபுடையுண்டு; அதாவது பரன் என்று பரம புருஷனை எம்பெருமானைச் சொல்லிற்றாய், அவனுடைய திருவடிகளையும் என் சென்னித் தரிக்கவைத்தான் என்றதாகவுமாம். "பரன் பாதமென சென்னித் தரிக்கவைத்தான்" என்றும் பாடமாம். (**என**—என்னுடைய.) ... ... ... 4

**எனக்குற்ற செல்வ மிராமாநுசனென்று* இசையகில்லா**
**மனக்குற்றமாந்தர் பழிக்கில்புகழ்* அவன் மன்னியசீர்**
**தனக்குற்றவன்பரவன் திருநாமங்கள் சாற்றும், என்பா**
**வினக்குற்றங் காணகில்லார்* பத்தியேய்ந்த வியல்விதென்றே.** 5

| | |
|---|---|
| எனக்கு உற்ற செல்வம் இராமாநுசன் என்று | 'நமக்குப் ப்ராப்தமான ஸம்பத்து எம்பெருமானாரே' என்று |
| இசைய கில்லா | அத்யவஸாயங் கொண்டிருக்க மாட்டாத |
| மனக்குற்றம் மாந்தர் | துஷ்டஹ்ருதயர்களான மனிசர் |
| பழிக்கில் | (இந்நூலைப் பழிப்பார்களாகில் |
| புகழ் | (அன்னவர்களுடைய பழிப்பே இதற்குப்) புகழாய்விடும்; |
| அவன் | அவ்வெம்பெருமானுடைய |
| மன்னிய சீர் தனக்கு | நித்யஸித்தமான கல்யாண குணங்களுக்கு |
| உற்ற | தகுதியான |
| அன்பர் | அன்பையுடையவர்களான மஹான்கள் |
| பத்தி ஏய்ந்த இயல்விது என்று | இந்நூலானது பக்தியோடு கூடின ப்ரவ்ருத்தியையுடையதென்று (திருவுள்ளம்பற்றி |
| அவன் திருநாமங்கள் சாற்றும் என் பா இனம் குற்றம் காணகில்லார் | அவ்விராமாநுசனுடைய திருநாமங்களைச் சொல்லுகின்ற என்னுடைய (இந்தப்) பாசுர மாலைகளிலுள்ள குற்றங்களைக் காணமாட்டார்கள். |

***—உலகத்தில் ஒரு பிரபந்தம் பிறந்தால் அதனைத் தூஷிப்பார் பலரும், பூஷிப்பார் சிலரும் ஏற்படுவது வழக்கம். உண்மையில் தோஷங்கள் இல்லாதிருந்தாலும் எதையாவது சொல்லித் தூஷித்தே தீருவர்கள். குற்றங் குறைகள் இருந்துவிட்டால் தூஷகர்களின் உத்ஸாஹம் கேட்கவே வேண்டியதில்லை. அறிவிலியான நான் இயற்றும் இந்நூலில் தோஷங்கள்தான் மிகையாக இருக்கக்கூடும்; அவற்றைக்கண்டு எல்லாரும் இகழார்களோ என்று தாமே சங்கித்துக் கொண்டு, ஸமாதாநமும் தாமே கூறுகிறார் இதில்;—எம்பெருமானரையே ஸர்வஸ்வமாகக் கொண்ட மஹாநுபாவர்கள் இந்நூலைக் கடாக்ஷிப்பர்களாகில் சொற்களிலுள்ள குற்றங் குறைகளில் அவர்கள் கண்வையாமல் "ஹா ஹா! பக்திப் பெருங்காதல் உள்ளடங்காமல் வெளிப்புறப்பட்ட சொல் தொடை யன்றோ இது!" என்று உகப்பர்கள். ஏனெனில், அவர்கள் எம்பெருமானருடைய திருக்குணங்களில் மெய்யே ஈடுபட்டவர்களாதலால் அவருடைய திருநாமங்களைப் பேசப்பிறந்த நூல் எத்தன்மைத்தாயினும் க்ரந்தகர்த்தாவின் ஹ்ருதய பரிபாக மொன்றையே கணிசித்து, "பித்தர் சொன்னவும் பேதையர் சொன்னவும் பத்தர் சொன்னவும் பன்னப்பெறுபவோ" என்று கொண்டு பக்தியை நோக்கி உகந்திடுவர்கள். எம்

பெருமானுரிடத்து அத்தகைய பக்தி [அதாவது—'இவரே நமக்கு ஸர்வஸ்வம்' என்கிற அத்யவஸாயம்] இல்லாத கல்மஷபுத்திகளான மனிசர்கள், குணங்களை யறியமாட்டாதே கேவலம் தோஷைகதர்சிகளாகையாலே ஏதேனும் தோஷங்களை ஏறிட்டோ உள்ள தோஷங்களை எடுத்துரைத்தோ நிந்திப்பர்களாகில், அன்னவருடைய தூஷணம் நமக்கு பூஷணமேயா மித்தனை என்கிறுர். ''அலகை முலை சுவைத்தாற் கன்பரடிக்கன்பர், திலதமெனத் திரிவார்தம்மை—உலகர், பழிதூற்றில் துதியாகும்'' என்றுரிறே அருளாளப்பெருமா ளெம்பெருமானுரும்.

இங்கே ஒரு சங்கை ;—'பிறருடைய பழிப்பு நமக்கு அப்ரயோஜகம்' என்று சொல்லவேண்டியிருக்க, அவர்களுடைய பழிப்புத்தானே நமக்குப் புகழாம் என்கைக்குக் கருத்தென்? அவர்களது பழிப்பு இவர்க்கு எப்படி புகழாய் விடும்? என்று சிலர் சங்கிக்கக்கூடும். அவர்கள் தெளியுமாறு சொல்லுகிறோம் ;—பழிப்பவர்கள் என்னவென்று பழிக்கின்றுர்களென்னில் ;—அமுதனுராம் ஒருவர் ; அவர் இராமாநுச நூற்றந்தாதி என்றொரு 'பிரபந்தம் பாடினுராம் ; அதில் ஒவ்வொரு பாட்டிலும் இராமாநுசன் என்று சொன்னதையே சொல்லிக்கொண்டு கிடக்கிறுர். தவிரவும், சாஸ்திரங்களில் புருஷார்த்தமாகச் சொல்லப்பட்டுள்ள ஐச்வர்யம் முதலானவற்றை இகழ்ந்துரைக்கிறுர் ; ஸகல புருஷார்த்தங்களும் தமக்கு 'உடையவர்' தானும் ; எம்பெருமானைக்கூட அவர் கண்ணெடுத்துப் பார்க்கமாட்டாராம். என்றிவை போல்வன சில வார்த்தைகளைச் சொல்லிப் பழிப்பர்கள். வாஸ்தவத்தில் இவையெல்லாம் குணமேயாதலால் குணகீர்த்தநத்தில் சேர்ந்து புகழ்ச்சியேயாய் முடியக் குறையில்லையென்க. எம்பெருமானைப் பழித்த சிசுபாலாதிகளும் பர்யாயேண குணகீர்த்தநம் பண்ணினுர்களாகவன்றோ உய்ந்துபோனது. ''கற்றினம் மேய்க்கலும் மேய்க்கப்பெற்றுன் காடுவாழ் சாதியுமாகப் பெற்றுன், பற்றி யுரலிடை யாப்புமுண்டான்'' என்று பாவிகள் ஏசுவதெல்லாம் அன்புடையார்க்கு குணகீர்த்தநமாகாநின்றதன்றே. பெரிய திருமொழியில் ''மானமருமென்னேக்கி'' என்னுந் திருமொழியில் தூஷண பரமாகச் செல்லுகிற முன்னடிகளையும் பூஷணபரமாகச் செல்லுகிற பின்னடிகளையும் விவேகித்தறிக. ''ஊரவர்கவ்வை எருவிட்டு'' என்ற திருவாய்மொழியின் உட்கருத்தும் உய்த்துணரத்தக்கது. உத்தமாதிகாரிகளுடைய அத்யவஸாயமெல்லாம் ஸாமாந்ய ஞானிகளுக்கு இகழ்ச்சிக்கு உறுப்பாகுமென்பது ஸாரார்த்தம்.

''பத்தியேய்ந்த இயலிதென்றே'' என்றும் பாடமுண்டாம். இது பத்தி நிறைந்த சொல்—என்றபடி. இயல்—சொல். ... ... ... 5

**இயலும்பொருளு மிசையத் தொடுத்து* ஈன்கவிகளன்பால்**
**மயல்கொண்டு வாழ்த்து மிராமாநுசனை* மதியின்மையால்**
**பயிலும்கவிகளில் பத்தியில்லாத வென் பாவிநெஞ்சால்**
**முயல்கின்றனன்* அவன்றன் பெருங்கீர்த்தி மொழிந்திடவே. 6**

| | | | |
|---|---|---|---|
| ஈன் கவிகள் | விலக்ஷணரான கவிகள் | கவிகளில் | பாடல்களிலே |
| அன்பால்- | ப்ரீதியினுலே | பத்தி இல்லாத | பக்தியற்றதான |
| இயலும்பொருளும் | சப்தமும் அர்த்தமும் | என் பாவி நெஞ்சால் | என்னுடைய பாபிஷ்டமான நெஞ்சினுலே |
| இசைய | நன்கு பொருந்தும்படியாக | அவன் தன் | அவ்வெம்பெருமானுருடைய |
| தொடுத்து | கவனம்பண்ணி | பெரு கீர்த்தி | அளவற்ற கீர்த்திகளை |
| மயல் கொண்டு | வ்யாமோஹம் தலையெடுத்து | மொழிந்திட | பேசுவதாக |
| வாழ்த்தும் இராமாநுசனை பயிலும் | துதிக்கும்படி நின்ற எம்பெருமானுரை வருணிக்கின்ற | மதி இன்மையால் முயல்கின்றனன் | புத்தியில்லாமையினுலே ப்ரவர்த்திக்கின்றேன். |

***—"பத்தியேய்ந்த வியல்விதென்றே" என்று கீழ்ப்பாட்டிற் சொன்னவிவர், அப்படிப்பட்ட பக்தி தமக்கு உண்டோ வென்று பார்த்தார்; அவ்விஷயத்துக்குத் தக்க பக்தி தமக்கு இல்லை யென்றறிந்தார்; 'அந்தோ! நாமோ அவ்வெம்பெருமானாரைத் துதிக்க இழிந்தது!' என்று தம்மைத்தாமே வெறுத்துக்கொள்ளுகிறார் இதில். இன்கவி பாடும் பரமகவிகளான சில மஹான்கள் சொல்லின்பமும் பொருளின்பமும் நன்கு பொருந்துமாறு கவிபண்ணி ஆந்தரமான அன்பினாலே வ்யாமோஹித்து இராமாநுசனை வாழ்த்தா நிற்பர்கள்; அன்னவர்களுடைய பக்தி பரீவாஹ ரூபமான கவிகளில் ஆதரமற்ற எனது பாவி நெஞ்சால் அவ்விராமாநுசனுடைய பெருப்பெருத்த புகழ்களையெல்லாம் பேசுவதாக நான் முயற்சி செய்கின்றேனே! இஃது என்ன புத்திகெட்ட தன்மை! என்று வெறுத்துக்கொள்ளுகிறார்.

"கவிகள்...வாழ்த்து மிராமாநுசனை"—கவிகளால் மங்களாசாஸனம் பண்ணப்படுகிற இராமாநுசனை என்றபடி. **மயல்** எனினும் **மையல்** எனினும் ஒக்கும்; வ்யாமோஹம்; அறிவு கேடு: மங்களாசாஸநம் பண்ணும்போது அறிவு கெடவேணுமிறே. அறிவு உள்ளபடியே கிடந்ததாகில் வாழி, பல்லாண்டு, ஜயவிஜயீபவ' இத்யாதி சப்தங்கள் வெளிவர வொண்ணாதிறே. "மதியின்மையால்" என்றவிது நான்காமடியில் அந்வயிக்கக்கடவது. **மதி**—வடசொல். **இன்மை**—இல்லாமை. 6

**மொழியைக்கடக்கும் பெரும்புகழான்* வஞ்சமுக் குறும்பாம்**
**குழியைக்கடக்கும் நம் கூரத்தாழ்வான் சரண்கூடியபின்***
**பழியைக்கடத்து மிராமாநுசன் புகழ்பாடி அல்லா**
**வழியைக்கடத்தல்* எனக்கினி யாதும் வருத்தமன்றே.** 7

| | |
|---|---|
| மொழியைக் கடக்கும் | வாய்கொண்டு வருணிக்க முடியாதபடி வாசாமகோசரமான |
| பெரு புகழான் | பெரிய புகழை யுடையவரும் |
| முக்குறும்பு ஆம் வஞ்சக் குழியை கடக்கும் | கல்விச்செருக்கு, செல்வச்செருக்கு, குலச்செருக்கு என்னும் மூவகைக் குறும்புகளாகிறபடுகுழியைக் கடந்திருப்பவரும் |
| நம் | நமக்கு நாதருமான |
| கூரத்து ஆழ்வான் | கூரத்தாழ்வானுடைய |
| சரண் | திருவடிகளை |
| கூடிய பின் | நான் ஆச்ரயித்த பின்பு |
| பழியை கடத்தும் | ஸர்வபாப நிவர்த்தகரான |
| இராமாநுசன் | எம்பெருமானாருடைய |
| புகழ் பாடி | நற்குணங்களைப்பாடி |
| அல்லா வழியை கடத்தல் | ஸ்வரூபத்திற்குச்சேராத தீய வழிகளைத் தப்பிப் பிழைக்கையானது |
| எனக்கு | அடியேனுக்கு |
| இனி | இனிமேலுள்ள காலமெல்லாம் |
| யாதும் வருத்தம் அன்று | ஈஷத்தும் ப்ரயாஸ ஸாத்யமன்று; எளிதேயாம். |

***—எம்பெருமானாரைத் துதிப்பதற்குத் தாம் யோக்யதையற்றவர் என்று பின்வாங்கப்பார்த்த அமுதனார், தமக்குள்ள ஆழ்வான் திருவடி ஸம்பந்தத்தை நினைத்து இஃது இருக்கும்போது எனக்கு அஸாத்யமானது ஒன்றுமில்லையென்று துணிவு கொள்ளுகிறார் இதில்—"வாசாமகோசர மஹாகுண தேசிகாக்ர்ய கூராதிநாத" என்றபடி வாய்கொண்டு வருணிக்க முடியாத பெரும்புகழ் படைத்தவரும், கல்வி, செல்வம், குலம் என்ற மூன்றுவகை ஸம்பத்தும் புஷ்கலமாயிருந்தும் அவற்றால் இறையும் அஹங்கார மடையாதவருமான கூரத்தாழ்வானுடைய சரணாரவிந்தங்களை ஆச்ரயித்து க்ருதக்ருத்யனான வெனக்கு எம்பெருமானாருடைய திருக்குணங்களைப் பாடுதலும் அதுவே காரணமாக அர்ச்சிராதிகதி யொழிந்த மற்ற கதிகளிற் போகாதபடி அவ்வழியே போதலும் மிகவுமெளிதேயாம் என்றாராயிற்று.

நம் பூருவாசாரியர்கள் எல்லாருமே சிறந்த புகழுடையராயினும் ஆழ்வா
4 னுடைய புகழ் அத்யந்த விலக்ஷணமென்பது ப்ரஸித்தமான விஷயம். நம் தர்சநத்

துக்கு மஹாத்ரோஹியான நாலூரானுக்குக் கொடிய நரகங்களைக் கொடுக்கவேணுமென்று பகவத்ஸந்நிதியிலே ப்ரார்த்திக்கவேண்டியிருக்க, பேரருளாளன் திருமுன்பே வரதராஜஸ்தவத்தை விண்ணப்பம் செய்து கண்தெரியும்படி வரம் வேண்டிக்கொள்ளீர் என்ற ஸ்வாசார்ய நியமநத்தையும் அதிக்ரமித்து ''நான் பெற்றபேறு நாலூரானும் பெறவேணும்'' என்று வரம் வேண்டிக்கொள்ளும்படி விசாலமான திருவுள்ளம்பெற்ற ஆழ்வானுடைய புகழை நாம் என்சொல்வோம்! ''மொழியைக் கடக்கும் பெரும்புகழான்'' என்று சொல்வது தவிர வேறு வாசகமில்லைகாணும்.

**[வஞ்சமுக்குறும்பாமித்யாதி.]***குலம் ரூபம் வயோ வித்யா தநஞ்ச மதயந்த்யமும்* என்று செருக்கை விளைக்கக்கூடியவை ஐந்து கிடந்தாலும், கல்விச்செருக்கு, செல்வச்செருக்கு, குலச்செருக்கு என்ற இம்மூன்று அஹங்காரங்கள் மிகக்கொடியவை; இவற்றைக் கடத்தல் ஆர்க்கும் அரிது; இவற்றைக் கடந்தவர் என்னும் ஏற்றம் ஆழ்வானொருவர்க்கே அஸாதாரண மென்பதாக எம்பெருமானார் காலத்திலேயே ப்ரஸித்தமாயிற்று. திருவாய்மொழியில் ''பலரடியார்முன்பருளிய பாம்பணையப்பன்'' என்றவிடத்து ஈடு முப்பத்தாறுயிரத்தில் ஆழ்வான் விஷயமாக அருளிச்செய்யப்பட்டதொரு ஐதிஹ்யம் குறிக்கொள்ளத்தகும். மற்றும் பல இதிஹாஸங்களும் பன்னி யுரைக்குங்காற் பாரதமாம். ... ... ... 7

**வருத்தும் புறவிருள்மாற்ற* எம்பொய்கைப்பிரான் மறையின்**
**குருத்தின் பொருளையும் செந்தமிழ்தன்னையுங்கூட்டி* ஒன்றத்**
**திரித்தன் றெரித்த திருவிளக்கைத் தன்திருவுள்ளத்தே**
**யிருத்தும் பரமன்* இராமாநுசனெம் மிறையவனே.** 8

| | | | |
|---|---|---|---|
| வருத்தும் | வருத்தத்தை யுண்டு பண்ணக்கூடிய | எரித்த திருவிளக்கை | ஜ்வலிக்கச்செய்த (முதல் திருவந்தாதியாகிற) திருவிளக்கை |
| புறம் இருள் | பாஹ்ய விஷயங்களைப்பற்றின அஜ்ஞானமாகிற இருளை | | |
| மாற்ற | போக்குவதற்காக | தன் திரு உள்ளத்தே | தனது திருவுள்ளத்தே |
| எம் பொய்கைப் பிரான் | நமது குலத்தலைவரான பொய்கையாழ்வார் | | |
| அன்று | முற்காலத்தில் | இருத்தும் | வைத்துக்கொண்டிரா நின்ற |
| மறையின் குருத்தின் பொருளையும் செந்தமிழ் தன்னையும் கூட்டி ஒன்ற திரித்து | வேதாந்தங்களிற் பதிந்து கிடக்கும் பொருள்களையும் செந்தமிழ்ச் சொற்களையுங் கூட்டி இரண்டையும் ஒன்றுசேர ஒருதிரியாக்கி | பரமன் இராமாநுசன் | மஹாவைபவசாலியான எம்பெருமானார் |
| | | எம் இறையவன் | நமக்கு ஸ்வாமி. |

***_ பகவத்பாகவத விஷயம் அந்தரங்க விஷயமென்றும், சப்தாதி விஷயங்கள் பாஹ்ய விஷயம் (அதாவது-புறவிஷயம்) என்றும் சொல்லப்படும். அந்த பாஹ்ய விஷயங்களைப்பற்றின அஜ்ஞாநாந்தகாரமானது புறவிருள் எனப்படும்; [புறம்பான விஷயங்களைப்பற்றின இருள் புறவிருள்] அவ்விருளானது முதலிலே ஸுகரூபம்போல் தோற்றினாலும் பிறகு மிக்க வருத்தத்தை விளைக்கக்கூடியது; அப்படிப்பட்ட கொடிய இருளை அகற்றுவதற்காகப் பொய்கையாழ்வார் ''வையம் தகளியா வார்கடலே நெய்யாக வெய்ய கதிரோன் விளக்காக'' என்று தொடங்கித் திருவந்தாதி திவ்ய ப்ரபந்தமென்னும் ஒரு விளக்கை ஏற்றியருளினார். அவ்விளக்குக்கு எதைத் திரியாக்கினார் என்றால், வேதாந்தங்களில் திரண்டு கிடக்கும் ஸாரப்

பொருள்களையும் இனிய தமிழ்ச்சொற்களையும் ஒன்றுசேர்த்துத் திரித்தார். அப்படிப்பட்ட திருவிளக்கை எம்பெருமானார் தமது திருவுள்ளத்தினுள்ளே எப்போதும் அணையாதபடி ஸ்தாபித்தருளினார்; அவரே அடியேனுக்கு ஸ்வாமி என்றாராயிற்று.

இருளை மாற்றுவதற்கு விளக்கு வேண்டியதாதலாலும் பொய்கையாழ்வாருடைய திவ்யப்ரபந்தம் இருளை மாற்றுவதாதலாலும் அஃது ஒரு திருவிளக்காக ரூபிக்கப்பட்டதென்க. **மறையின் குருத்து**—மறையின் முடிவாகிய வேதாந்தம். **அன்று**—திருக்கோவலிடைகழியில் ''நீயுந் திருமகளும் நின்றாயால்'' என்ற பாசுரத்தின்படி நெருக்குண்ட அக்காலத்திலே என்கை. பொய்கைப்பிரான் எரித்த திருவிளக்கைத் தம் திருவுள்ளத்தே இருத்துகையாவது—அவருடைய அருளிச்செயலை எப்போதும் சிந்தை செய்தல். ... ... ... ... 8

**இறைவனைக்காணு மிதயத் திருள்கெட* ஞானமென்னும்**
**நிறைவிளக்கேற்றிய பூதத்திருவடி தாள்கள்* நெஞ்சத்**
**துறையவைத்தாளு மிராமாநுசன் புகழோதும் நல்லோர்**
**மறையினைக்காத்து* இந்தமண்ணகத்தே மன்ன வைப்பவரே. 9**

| | | | |
|---|---|---|---|
| இறைவனை | ஸர்வ ஸ்வாமியான எம்பெருமானை | ஆளும் | (அவற்றையே) அநுபவிக்கின்ற |
| காணும் | ஸாக்ஷாத்கரிப்பதற்கு உபகரணமான | இராமாநுசன் | எம்பெருமானாருடைய |
| இதயத்து | ஹ்ருதயத்திலுள்ள | புகழ் | திவ்ய குணங்களை |
| இருள்கெட | அஜ்ஞாநமாகிற அந்தகாரமானது நசிக்கும்படியாக | ஓதும் | இடைவிடாது அநுஸந்திக்கின்ற |
| ஞானம் என்னும் நிறைவிளக்கு ஏற்றிய | ஞானமாகிற பூர்ண தீபத்தை ப்ரகாசிப்பித்தருளி இரண்டாந் திருவந்தாதியை அருளிச்செய்த | நல்லோர் | விலக்ஷண புருஷர்கள்தாம் |
| | | இந்த மண் அகத்தே | இப் பூமண்டலத்திலே |
| பூதத்திருவடி | பூதத்தாழ்வாருடைய | மறையினை | வேதங்களை |
| தாள்கள் | திருவடிகளை | காத்து | ரக்ஷித்து |
| நெஞ்சத்து | தமது திருவுள்ளத்திலே | மன்ன வைப்பவர் | என்றைக்கும் அழிவில்லாதபடி ப்ரதிஷ்டாபனம் பண்ணவல்லவர்கள். |
| உறைய வைத்து | சாச்வதமாக ஸ்தாபித்து | | |

***—'ஸ்ரீமத் வேதமார்க்க ப்ரதிஷ்டாபநாசார்யர்' என்னும் விருது இராமாநுசனுடையார்க்கே ஏற்குமென்கிறார்—ஸர்வ ஸ்வாமியான எம்பெருமானை ஸாக்ஷாத்கரிப்பதற்கு எல்லார்க்கும் உபகரணமாயிராநின்ற ஹ்ருதயமானது அஜ்ஞாநாந்தகாரத்தாலே இருண்டு கெட்டுப்போகாதபடி பரஜ்ஞாநமாகிற பூர்ண தீபத்தை ஏற்றினவரான பூதத்தாழ்வாருடைய திருவடிகளைத் தமது திருவுள்ளத்திலே இடைவிடாது வைத்துக்கொண்டு அவற்றையே அனுபவிக்கும் எம்பெருமானாருடைய குணகீர்த்தநமே போது போக்காக இருக்கும் விலக்ஷணர் யாரோ அவர்கள் தாம் வேதத்தை நன்றாக ரக்ஷித்து இந்நிலவுலகத்தில் நிலைநிறுத்தவல்ல மஹான்கள் என்றாராயிற்று. ''ஞானமென்னும் நிறைவிளக் கேற்றிய'' என்றவிடத்து, ''ஞானச் சுடர்விளக் கேற்றினேன் நாரணற்கு'' என்ற பூதத்தாழ்வார் தம்முடைய அருளிச்செயல் நினைக்கத்தக்கது. **இதயம்**—ஹ்ருதயம் என்ற வடசொல் விகாரம். பூதத்தாழ்வார் ஏற்றிய ஞானமென்னும் நிறைவிளக்காவது—இரண்டாந் திருவந்தாதியாகிற அவருடைய அருளிச்செயல். **பூதத்திருவடி**—திருவடியென்று இங்கே ஸ்வாமிக்கு வாசகம்; பூதத்தாரெனும் ஸ்வாமி என்றபடி. ''**திருவடி** தன் நாமம் மறந்தும்'' ''நமரும் பெறல**அடிகள்**'' ''என்பிழைத்தாள் **திருவடியின்** தகவினுக்கு'' இத்யாதியான அருளிச்செயல் பிரயோகங்களைக் காண்க. [இந்த

**மண்ணகத்தே மறையினைக் காத்து மன்னவைப்பவர்** ] எம்பெருமானார் ஸம்பந்தம் பெறாத மற்றையோர்கள் ''வேதம் ப்ரமாணமேயல்ல'' என்று சொல்லுவாரும், அதனைப் பிரமாணமாக ஒப்புக்கொண்டும் அபார்த்தங்கள் பண்ணுவாருமாய் இருப்பதால் அவர்கள் யாவரும் வேதமார்க்க வித்வம்ஸிகள்; இராமாநுசனுடையார் தாம் ஸ்ரீமத் வேதமார்க்க ப்ரதிஷ்டாபநாசார்யர்கள் என்றபடி. ... ... 9

**மன்னிய பேரிருள் மாண்டபின்* கோவலுள் மாமலராள்**
**தன்னொடு மாயனைக் கண்டமை காட்டும்* தமிழ்த் தலைவன்**
**பொன்னடி போற்று மிராமாநுசற் கன்பு பூண்டவர்தாள்**
**சென்னியிற் சூடும்* திருவுடையா ரென்றுஞ் சீரியரே.** 10

| | |
|---|---|
| **மன்னிய** | ஒருவராலும் பேர்க்க முடியாதபடி நிலைத்து நின்ற |
| **பேர் இருள்** | (அஜ்ஞாநமாகிற பெருத்த இருளானது |
| **மாண்ட பின்** | முற்பட்ட [illegible] ஆழ்வார்களிருவரும் ஏற்றின திருவிளக்காலே) நன்றாக நீங்கின பின்பு. |
| **கோவலுள் ஆயனை** | திருக்கோவலூரில் ஆயனாரை |
| **மாமலராள் தன்னொடும்** | பிராட்டியோடுகூட |
| **கண்டமை** | தாம் ஸேவித்தபடியை |
| **காட்டும்** | (''திருக்கண்டேன்'' இத்யாதி ப்ரபந்த முகத்தாலே) வெளியிட்டருளின |
| **தமிழ் தலைவன்** | தமிழ்க்குத் தலைவரான பேயாழ்வாருடைய |
| பொன் அடி | அழகிய திருவடிகளை |
| போற்றும் | புகழுமவரான |
| இராமாநுசற்கு | எம்பெருமானார் திறத்தில் |
| அன்பு பூண்டவர் | பக்தியையுடையவர்களினது |
| **தாள்** | திருவடிகளை |
| சென்னியில் சூடும் திரு உடையார் | சிரோ பூஷணமாகக்கொள்ளுஞ் செல்வமுடையோர் தாம் |
| என்றும் சீரியர் | என்றைக்கும் ஸ்ரீமான்கள். |

* * *—பொய்கையாழ்வாரும் பூதத்தாழ்வாரும் ஏற்றின இரண்டு திருவிளக்குகளாலும் இருள் நீங்கவே, ''திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன்'' என்று திருக்கோவலூராயனாரைப் பிராட்டியோடுகூட ஸேவிக்கப் பெற்றார் பேயாழ்வார். தாம் அப்படி ஸேவித்ததாக மூன்றாந் திருவந்தாதி முகத்தால் வெளியிட்டருளின அவ்வாழ்வாருடைய திருவடிகளைத் துதிக்குமவரான எம்பெருமானார் திறத்தில் பக்தியையுடையவர்கள் யாரோ, அவர்களுடைய திருவடிகளைச் சிரோபூஷணமாகக் கொள்வதையே அழியாச் செல்வமாக நினைத்து ஸ்ரீராமாநுஜ பக்தர்களுடைய திருவடியைச் சிரமேற்கொள்ளுமவர்கள் தாம் நித்திய ஸ்ரீமான்கள் என்றாயிற்று. ''அரசமர்ந்தானடிசூடு மரசையல்லால் அரசாகவெண்ணேன் மற்றரசுதானே'' என்று குலசேகரப் பெருமாளுக்கு ப்ரதம பர்வத்திலே உண்டான நிஷ்டை அமுதனார்க்கு சரமபர்வத்திலே உண்டானபடி [ப்ரதம பர்வமாவது பகவத்விஷயம். சரம பர்வமாவது பாகவத விஷயம்.]

**[கோவலுள் ஆயனை.]** திருக்கோவலூரெம்பெருமான் க்ருஷ்ணாவதாரத்திலிருந்த ஆச்ரித பாரதந்திரிய மடங்கலும் தோற்ற ஸேவை ஸாதிக்கும்படியைப் பற்ற **ஆயன்** என்று திருநாமம் பெற்றான்; ''திருக்கோவலூராயனார்'' என்று ப்ரஸித்தி. இப்பாட்டில் பேயாழ்வார் ''தமிழ்த்தலைவன்'' என்று சிறப்பித்துக்கூறப்பட்டார். **சீரியர்**—சீர்மையுடையோர்; சீர்மையாவது ஸ்ரீமானாயிருக்கை. ... ... 10

**சீரியநான்மறைச் செம்பொருள்* செந்தமிழா லளித்த**
**பாரியலும்புகழ்ப் பாண்பெருமாள்* சரணாம் பதுமந்**
**தாரியல்சென்னி யிராமாநுசன் தன்னைச் சார்ந்தவர்தம்**
**காரியவண்மை* என்னால் சொல்லொணாதிக் கடலிடத்தே.** 11

ராபர் இரண்டாவது பக்கத்தின் தொடர்ச்சி

நினைவுச்சின்னமாக ஒரு மண்டபம் கட்டவேண்டுமென்று மேற்படி நிலத்திற்கு சொந்தக்காரரான சென்னை ஸ்ரீ ஸரஸ்வதி பண்டாரக் கமிட்டியாரைத் தூண்டி இதற்காக தாம் ரூ. 45,000/– நன்கொடையளித்து ஸ்ரீமான் உ. வே. மஹாமஹோபாத்யாய ப்ர. அண்ணங்கராசார்யர் ஸ்வாமி மூலம் இக்கட்டடத்திற்கு அடிக்கல்லையும் நாட்டவைத்தார். உலகப்ரஸித்தரான ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி, ஸ்ரீமந் நாராயண ஜீயர் ஸ்வாமியும் இதில் விசேஷமாக ஊக்கம் கொண்டு எப்படியும் பெரியதொரு மண்டபம் கட்டியே ஆகவேணுமென்று துணிந்து புதுச்சேரியில் பெரிய (உணவு அதிகாரி) உத்யோகத்திலிருந்து ஓய்வுபெற்ற ஸ்ரீமான் ஆர். அனந்தாசாரியர் என்கிற பெரியவரை ஸ்ரீ காஞ்சிக்கு அனுப்பி மேற்படி கைங்கர்யத்தை நடத்த நியமித்தார். (இச்சீயர் ஸ்வாமியால் பலவாண்டுகளுக்கு முன் இவ்விடத்தில் ஸ்தாபிக்கப்பட்ட ஸ்ரீராமக்ரதுஸ்தம்பம் இங்கு விளங்கிவருகிறது.) அதன்படி மேற்படி ஸ்ரீமான் ஆர். அனந்தாச்சாரியரும் வெகு அக்கரையுடன் திருப்பணியாரம்பித்து விரைவிலேயே, அதாவது 6 மாதத்திற்குள் விமானத்துடன் கர்ப்பக்ருஹம், அர்த்த மண்டபம், பெரிய திருமண்டபம், தேசாந்திரிகள் தங்கும் அறை, ஆக இவற்றை ரூ. 50,000/– செலவில் சிக்கனமாக புதிதாக நிருமித்து 14—7—76 புதன்கிழமையன்று காலை திருப்ரதிஷ்டையும் நடத்தி வைத்தார். தேவப்பெருமாள் ஸன்னதி பெரிய அர்ச்சகர் ஸ்ரீமான் வரதராஜ பட்டாசாரியர் தம் பரிவாரங்களுடன் எழுந்தருளி யிருந்து வாஸ்து சாந்தி முதலிய அங்கங்களுடன் மண்டபப்ரதிஷ்டையை சிறப்பாகநடத்திவைத்தார்.

அச்சமயம் சின்ன காஞ்சிபுரத்தில் எழுந்தருளியிருக்கும் உபயகலை ஸ்ரீ வைஷ்ணவர்களனைவரும் அங்கு கூடியிருந்தார்கள், சென்னையிலிருந்து மேற்படி ஸரஸ்வதீ பண்டாரக் கமிட்டி காரியதரிசி ஸ்ரீமான் எப். ஏ. சிங்கராசாரியரும் (தம்பியுடன்) வந்திருந்து காரியங்களை நடத்தி வைத்தார். ஸ்ரீமான் ஆடிட்டர் ராஜகோபாலாசாரியர், அவர் குமாரர் ஸ்ரீமான் ஸத்யம், பாலிடெக்னிக் பிரின்ஸிபால் திருவாளூர் கலியபெருமாள், (இவர் முதலிலிருந்தே இக்கட்டடம் கட்ட, வேண்டிய ஆலோசனைகள் கூறியும், வேலைக்காரர்களை யமைத்துக் கொடுத்தும், மற்றும் பல விதங்களில் பேருதவி செய்தவர்), வருமானவரி அதிகாரி திரு. கோவிந்தசாமி அய்யர், மாஜி சேர்மன் திருவாளர் கிருஷ்ணசாமி முதலியார், முதலிய பலபல லௌகிகப்ரமுகர்களும் விஜயம் செய்திருந்தார்கள். வேதபாராயணத்துடன் ஹோமம், புரோக்ஷணம் முதலிய வைதிக காரியங்கள் தலைக்கட்டினபிறகு ஸ்ரீமான் உ. வே. மஹாமஹோபாத்யாய ப்ர. அண்ணங்கராசாரியர் ஸ்வாமி 'யோநித்யமச்யுத' என்னும் தனியனின் பொருளை விவரித்து உடையவர் வைபவத்தை தமது அஸாதாரணமான பாணியில் தெளியவைத்து உபந்யஸித்தருளினர். ஸ்ரீமான் தி. அ. அக்காரக்கனி ஸம்பத்குமாராசாரியர் இத்திருமாளிகையின்புனிதத்தன்மையையும், மண்டபம் ஏற்பட்ட காரணத்தையும் விளக்கி இத்திருப்பணிக்கு பலவிதங்களிலும் உதவியளித்த பெரியவர்களுக்கு நன்றி தெரிவித்தார். தேவப்பெருமாள் அனுப்பியருளிய ப்ரஸாத விநியோகத்துடன் கோஷ்டி இனிது நிறைவேறியது. ஸ்ரீ உ. வே. மஹாமஹோபாத்யாய P.B A. ஸ்வாமி ஷை அனந்தாசாரியருக்கு ஒரு பொன்னாடையும் போர்த்தியருளினர்.

இந்த கட்டிடத்தின் ஞாபகார்த்தமாக சலவைக்கல்லில் எம்பெருமானார் திருவுருவம் ஏறியருளப்பண்ணியிருக்கிறது. ஸ்ரீமான் அக்காரக்கனி ஸம்பத்குமாராசாரியரால் பல மாதங்களுக்குமுன் ஆரம்பிக்கப்பட்ட கீதாபாஷ்ய காலக்ஷேபம் தற்சமயம் இம்மண்டபத்தில் நடத்தப்பட்டுவநது 31–7–76அன்று சாத்துமுறை நடந்தது. இப்படியே விசேஷமான ஸத்காலக்ஷேபங்கள் நடப்பதற்கு இந்த புதிய கட்டிடம் மிகவும் சிறந்த இடமாய் விளங்குகிறது.

ராமாநுஜோ விஜயதே யதிராஜ ராஜ:

## P. B. அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளின் நூல் துறைகள்.

1. நாலாயிர திவ்யப்பிரபந்த வுரைகள்,
2. பூர்வாசார்ய தமிழ்ப்பிரபந்த ,,
4. ஸகல பூர்வாசார்ய ஸ்தோத்ர ,,
3. ஆழ்வாராசார்யப் பிரபாவ நூல்கள்,
5. இதிஹாஸ புராண சரித்திர ,,
6. ரஹஸ்யார்த்த விளக்க ,,
7. வேதாந்தப் பொருள் விளக்க ,,
8. ஸத்ஸம்ப்ரதாயார்த்த விளக்க ,,
9. வேதவிசாரலக்ஷண நூல்கள்.
10. லோகாபிராம உபன்யாஸ நூல்கள்.
11. பரபக்ஷப்ரதிக்ஷேப நூல்கள்
12. உபந்யாஸக ஸௌபாக்ய நூல்கள்
13. வடமொழி நூல் திரள்கள்,
14. ஹிந்தீ பாஷையில் நூல்கள்
15. தெலுங்கு பாஷையில் ,,
16. பூர்வாசார்ய க்ரந்த வெளியீடுகள்.

விரிவான கியாடலாகுகள் தருவித்து விவரங்காண்க.

சந்தாப்பணம் M. O. செய்பவர்கள்
*Editor*, GRANTHAMALA, Kancheepuram-631503
என்ற விலாசத்திற்கு அனுப்புக.

---

If un-delivered please return to :
P. B. ANNANGARACHARYA,
KANCHIPURAM. Pin Code-631503

---

To
Sriman / Srimathi




650. Sri P.A. Thiruvenkatacharya,
16, M.M. Sannidhi Street,
SRIPERUMBUDUR - 602105.

---

Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Sathgrantha Prakasana Sabha.

Printed by E. Devarajan at Sri Kamakshi Press, 44-C, T. K. Nambi St.,
Kancheepuram-3.